Rs. **28**

**VINDHAN KUTTIK KATHAIGAL**

*First Edition 2000*

*Published by*

**KALAIGNAAN PATHIPAGAM**
10 Kannadhasan Salai
T.Nagar, Chennai - 600 017.

*Typeset by*

**Sri Sathya Sai Graphics,**
Chennai - 17

Printed by J.M. Process & Prints
No.22, Thakududhin Khan Bahadur St.,
Triplicane, Chennai - 600 005.
Phone : 8572957

# படிப்பதற்கு முன்

குட்டிக்கதைகள் என்பது தமிழ் இலக்கியத்தில் இன்னொரு பரிணாமம்; இதை முதன் முதலில் அறிமுகப்படுத்தியவர் அமரர் விந்தன். அவர் எழுதிய (1) குட்டிக் கதைகள் (2) மகிழம்பூ ஆகிய இரு நூல்கள் ஒரே தொகுப்பாகப் பதிப்பிக்கப்பட்டு இன்று உங்கள் கைகளில் திகழ்கிறது.

தமிழ் இலக்கியத்தில் பல புதிய உத்திகள், பரிசோதனை முயற்சிகளை செய்தவர் விந்தன். 'குட்டிக்கதைகளென்ன 'ஓ மனிதா' போன்ற கட்டுரைகளென்ன, 'மிஸ்டர் விக்கிரமாதித்தன் கதைகள்' போன்ற வித்தியாசமான கற்பனையென்ன, 'பசி கோவிந்தம்' போன்ற புடைநூலென்ன 'பாட்டினில் பாரதம்' போன்ற கவிதை முயற்சியென்ன, எனப் பல பரிசோதனைகள் நிகழ்த்தியவர் விந்தன். இப்பரிசோதனைகள் பிற எழுத்தாளர்கள் முயற்சிக்காததாகும். அவர் சொல்வார், ''எழுத்தாளனுக்கு எழுத வராதது எதுவுமில்லை, ஒரு முழு எழுத்தாளனுக்கு கதை எழுத வரும், கவிதை எழுத வரும், கட்டுரை எழுத வரும், விமர்சனம் எழுத வரும். இது எனக்கு வராது என்று சொல்பவன் முழுமையான எழுத்தாளனே அல்ல'', என்பார்.

ஆனால், 50 வருடங்களாக விந்தனின் நூல்கள் ஒரு சேர சந்தையில் கிடைப்பதில்லை. இது அவருக்கு நேர்ந்த பொருளாதார நிர்ப்பந்தத்தால் ஏற்பட்ட ஒரு சோகம். இதனால் பல இலக்கிய விமர்சகர்கள், ஏன் அரசாங்கமும் கூட அவரை மறைத்து விட்டார்கள்; மறந்து விட்டார்கள்.

இக்குறையை களைய 'கலைஞன் பதிப்பகம்' சார்பில் திரு. நந்தா அவர்கள் விந்தனின் நூல்களை படிப்படியாக ஒரு சேர பதிப்பிக்க முன்வந்துள்ளார். ஏற்கெனவே 'மனிதன்' இதழ் தொகுப்போடு, விந்தனின் சிறுகதைகள் முழுவதும் இரண்டு பாகங்களாக வெளி வந்துள்ளது. பழைய வாசகர்களோடு இளைய தலைமுறையினரும் 'விந்தனை' முழுதும் அறிந்து கொள்ள இது உதவும். அவரது முயற்சியை பெரிதும்போற்ற நான் கடமைப்பட்டுள்ளேன்.

இந்தப் புத்தகத்தை நேர்த்தியான முறையில் வெளியிட உதவிய அனைவருக்கும் என் நன்றி.

அன்புடன்
**கோ. சூரியமூர்த்தி**

சென்னை - 43
16.7.2000

# அளவில்லை; போடுகிறோம்

தின்னச் சோறு, உடுக்கத் துணி, இருக்க வீடு, கேட்க இசை, பார்க்கக் காட்சி - இவற்றோடு படிக்க பத்திரிகைகளோடு புத்தகமும் வேண்டியதுதான் என்று தீர்மானித்தாலும் தீர்மானித்தீர்கள் - பிடித்தது தலைவலி, தமிழ் களஞ்சியத்துக்கு!

நிமிஷத்துக்கு நிமிஷம் உரையாசிரியர்களும், தொகுப்பாசிரியர்களும், பதிப்பாசிரியர்களும் தோன்றித் தோன்றி, தமிழ்க் களஞ்சியத்திலிருந்து அள்ளி அள்ளி, தமிழ்ப் பெரு மக்களான உங்களுக்கு வாரி வாரி வழங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

அதற்கேற்றாற்போல் களஞ்சியத்திற்குச் சொந்தக்காரர்களான சங்ககாலப் புலவர்களோ, சங்க காலத்தோடு சமாதியடைந்துவிட்டார்கள்; அவர்களுடைய ஏட்டைத் தேடி எடுத்து வைத்தவர்களோ அவர்களுடன் ஐக்கியமாகி விட்டார்கள்- அப்புறம் கேட்க ஆள் ஏது?-அடி கொள்ளை, கொள்ளையோ கொள்ளைதான்!

இதனால் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் அறிவுப் பஞ்சம் வந்து விடாதென்றாலும், அதனால் களஞ்சியமே காலியாகிவிடக் கூடாதல்லவா? அதற்காகத்தான் காலியாகும் களஞ்சியத்துக்கு ஏதாவது போட வேண்டுமே என்று நானும் பிரசுரத்தாரும் நினைத்தோம்: அதன் விளைவே இச்சிறு நூல்.

போடுவது நாழியாயிருந்தாலும் சாகுபடி சொந்தச் சாகுபடி; இது உங்களுக்குப் பிடித்திருந்தால் இதைத் தொடர்ந்து இன்னும் பல புத்தகங்கள் வெளியாகும்.

மற்றபடி வேறொன்றும் சொல்ல விரும்பவில்லை நாங்கள்; அதற்குத்தான் நீங்கள் இருக்கிறீர்களே!

**- விந்தன்**

# காலம் சிறிது!

இந்தத் தலைப்பைக் கண்டதும், ''அநியாயம், அக்கிரமம்! வைத்திய வசதிகள் பெருகினாலும் பெருகின, மனிதனின் ஆயுள் காலம் அனுமார் வால்போல் வளர்ந்து விட்டதே, அவன் சீக்கிரம் செத்துத் தொலையமாட்டேன் என்கிறானே, குறைந்தபட்சம் குழந்தை குட்டிகள் பெற்றுக் கொள்வதையாவது கொஞ்சம் குறைத்துக் கொள்ளுங்கள் என்றால் கேட்க மாட்டேன் என்கிறானே!'' என்று நாங்கள் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும்போது 'காலமாவது, சிறிதாவது?' என்று 'உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக உயிரை விட்டுக்கொண்டிருக்கும் அரசியல்வாதிகள் தயவு செய்து அடிவயிற்றில் அடித்துக்கொள்ள வேண்டாம். இது அந்த உலகத்தைப் பற்றியதல்ல; இலக்கிய உலகத்தைப் பற்றியது.

'காலம் சிறிது!' என்று நான் இங்கே எதற்காகச் சொல்ல வந்தேனென்றால், இது சினிமா யுகம்; இந்த யுகத்தில் எந்த எழுத்தாளானாவது, எதற்காகவாவது மேற்கோள் காட்ட நேர்ந்தால்கூட எதைக் காட்டுகிறான்? கம்பனையும் அவன் கவிதையையுமா காட்டுகிறான்? வள்ளுவனையும் அவன் குறளையுமா காட்டுகிறான்? சினிமாக் கவிஞனையும் சினிமாப் பாடலையும்தானே காட்டுகிறான்! அந்த நவீன சம்பிரதாயத்தைப் பின்பற்றி நானும் ஒரு சினிமாப் பாடலை இங்கே மேற்கோளாகக் காட்டுகிறேன்:

**''காலம் சிறிது, கனவுகள் பெரிது,**
**கவலைப்படுவது ஏன் மனது?''**

முடிந்தது கவிதை; முடிந்தது மேற்கோள்! சிறிதிலும் சிறிதான இந்தக் காலத்தில் கனவுகள் பெரிதாக இருக்கின்றனவோ என்னவோ, கதைகள் பெரிதாக இருக்கின்றன. உதாரணத்துக்கு இப்போது வரும் சிறு கதைகளைத்தான் எடுத்துக்கொள்ளுங்களேன்:

கதை நிகழும் நேரத்தை எடுத்துக் காட்ட ஒரு பக்கம்; சூழ்நிலையை விவரிக்க இரண்டு பக்கங்கள்; கதாபாத்திரங்களின் குணாதிசயங்களைப் 'படம் பிடித்துக் காட்ட' நாலு பக்கங்கள்; கதையை ஆரம்பித்து, நடத்தி, முடிக்க எட்டுப் பக்கங்கள்-இப்படியாகத்தானே இந்தக் காலத்தில் சிறுகதை இலக்கியம் வளருகிறதோ இல்லையோ, அதன் பக்கங்கள் வளர்ந்து கொண்டிருக்கின்றன. 'பக்கப் பசி' மிகுந்த பத்திரிகைக்காரர்களுக்கு இது பெரிதும் பயன்படுவதோடு, சமயத்தில் அதையே 'குறுநாவல்' என்று ஒரு போடு போட்டு வைக்கவும், பொழுது போகாத வாசகர்களின் பொழுதைப் போக்கவும்கூட உதவுகிறது.

ஆயினும் அவை சிலருக்குக் 'கொட்டாவிக் கதைக'ளாக அதாவது, படிக்க ஆரம்பிக்கும்போதே கொட்டாவிக்கு மேல் கொட்டாவியாக வரவழைத்துக் கொண்டேயிருக்கும் கதைகளாக அமைந்துவிடுவதும் உண்டு!

அதிலும் ஒரு நன்மை இருக்கத்தான் செய்கிறது; 'ஆபத்தில்லாத தூக்க மாத்திரைக'ளாக அவை பயன்பட்டு விடுகின்றன அல்லவா?

அந்தத் தொல்லைகளையெல்லாம் இந்தக் குட்டிக் கதைகளால் யாருக்கும் ஏற்படுவதில்லை. அதனாலேயே சிறிதினும் சிறிதான இந்தக் காலத்தில் அரிதினும் அரிதான தங்கள் நேரத்தை வீணாக்க விரும்பாத வாசகர்கள் பலருக்கு நாவல்களைவிட, சிறுகதைகளைவிட, குட்டிக்கதைகள்தான் அதிகம் பிடிக்கின்றன. ஏனெனில், அவற்றைப் படிப்பதற்காக அவர்கள் செலவிடும் நேரம் குறைவு; அடையும் பலனோ அதிகம்.

இது ரசிகர்களின் நிலை; கதாசிரியர்களின் நிலையோ? - நாவல் எழுதுவதைவிட, சிறுகதை எழுதுவதைவிட, குட்டிக் கதை எழுதுவது கடினம். ஆனால், பத்திரிகைக்காரர்கள் அதற்கு அளிக்கும் சன்மானமோ மிகவும் குறைவு!

எனினும், காலத்தால் சாகாத இந்தக் கதைகளுடன் இவற்றை எழுதும் கதாசிரியனும் காலத்தால் சாவதில்லை என்பது மட்டும் உண்மை.

அந்தப் பெருமை அடியேனுக்கும் ஒருவேளை கிட்டலாம். எப்போது? செத்த பின்!

அதுவரை......

உயிரோடு செத்துக்கொண்டிருக்கும் விந்தைதான் என்னைப்போன்ற எழுத்தாளர்களுக்குக் கை வந்த விந்தையாயிற்றே!

*சென்னை-30*
*14-3-'67*

வணக்கம்,

**விந்தன்.**

# பொருளடக்கம்

# விந்தன் குட்டிக் கதைகள்

## 1. அடக்கம்

'கொக்கரக்கோ' என்று கோழி கூவிற்று; கடலில் குளித்துவிட்டு எழுந்தான் கதிரவன்.

''வா தம்பி, வா!'' என்று தன் அலைக்கரங்களை நீட்டி அவனை அன்புடன் வரவேற்றது கடல்.

''நானாவது, உனக்குத் தம்பியாவது! இந்த உலகையே ஒளி மயமாக்கும் நான் எங்கே, நீ எங்கே? போ போ, எட்டிப் போ!'' என்றான் கதிரவன்.

''இருக்கலாம்; என்னைவிட நீ பெரியவனாகவே இருக்கலாம். அதனாலென்ன, உன்னிடம் அன்பு செலுத்தக் கூடவா உரிமை இல்லை எனக்கு?'' என்று கடல் கேட்டது.

''இல்லை; இல்லவே இல்லை. ஏனெனில், சிறியவர்கள் வழிபடுவதைத்தான் பெரியவர்கள் ஏற்றுக் கொள்வார்கள்; அன்பு செலுத்துவதை ஒரு நாளும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்!'' என்று சொல்லிவிட்டு மேலே சென்றான் கதிரவன்.

''வந்துவிட்டாயா, வா வா!'' என்று மேகக் கூட்டங்கள் ஆசையுடன் வந்து அவனைத் தழுவின. ''எட்டி நில்லுங்கள்; இந்த உலகையே ஒளி மயமாக்கும் நான் எங்கே, நீங்கள் எங்கே? நீங்களாவது, என்னைத் தழுவுவதாவது?'' என்று சொல்லிவிட்டு, இன்னும் மேலே சென்றான் கதிரவன்.

''வாப்பா, வா! எனக்காவது உன்னைத் தழுவ உரிமை உண்டா, இல்லையா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தது காற்று.

''என்னைப்போல் இந்த உலகை ஒளி மயமாக்க முடியுமா, உன்னால்?'' என்று அதைத் திருப்பிக் கேட்டான் கதிரவன்.

''முடியாது அப்பனே, முடியாது!'' என்று காற்று கையை விரித்தது. ''அப்படியானால் நீயும் என்னை வழிபடு, ஏற்றுக் கொள்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு, இன்னும் மேலே மேலே சென்றான் கதிரவன்.

''வழிபடுகிறேன்; பக்திப் பிரவாகம் பெருக்கெடுத்து ஓட உன்னை நான் நீ சொல்வதற்கு முன்னால் வழிபடு கிறேன்!'' என்று அவனை வழிபட்டுக் கொண்டே வந்தது மழை.

''அதுதான் சரி; அதுதான் சரி!'' என்று அதன் பக்திப் பிரவாகத்தில் அப்படியே உச்சி குளிர்ந்து போனான் கதிரவன்!

* * *

அந்தி மயங்கிற்று; ''அஸ்தமிக்க வேண்டியதுதான், நான் அஸ்தமித்ததும் இந்த உலகமே அஸ்தமிக்க வேண்டியதுதான்!'' என்று சொல்லிக்கொண்டே, மலை வாயை அடைந்தான் கதிரவன்.

'' அஸ்தமிக்காது அப்பனே, யார் அஸ்தமித்தாலும் இந்த உலகம் அஸ்தமிக்காது!'' என்றது மலை.

''வேடிக்கையாயிருக்கிறதே, நீ சொல்வது! என்னை விட்டால் வேறு யார் இருக்கிறார்கள், இந்த உலகை ஒளி மயமாக்க?'' என்று கதிரவன் கேட்டான்.

''அதோ பார், அந்தக் குடிசையை!'' என்றது மலை.

கதிரவன் பார்த்தான்; ஆரவாரம் எதுவும் இல்லாமல் அமைதியாக ஒளிர்ந்துகொண்டிருந்த ஓர் அகல் விளக்கு தன்னால் முடிந்தவரை அந்தக் குடிசையை ஒளி மய மாக்கிக் கொண்டிருந்தது!

## 2. ஆறாவது

''மிருகத்துக்கு ஐந்தே அறிவு; எனக்கு ஆறு அறிவாக்கும்!'' என்று மனிதன் அடிக்கடி பெருமை யடித்துக் கொள்வதைச் சிங்கத்தால் சகிக்க முடிய வில்லை. ஒரு நாள் அது கடவுளிடம் சென்று, ''கடவுளே கடவுளே! எங்களுக்கு ஐந்தறிவைக் கொடுத்துவிட்டு மனிதனுக்கு மட்டும் ஆறறிவைக் கொடுத்திருக் கிறீர்களே, இது நியாயமா?'' என்று கேட்டது.

கடவுள் திடுக்கிட்டு, ''அவனுக்கு நான் எங்கே ஆறறிவைக் கொடுத்தேன்?'' என்றார்.

''எங்களுக்கில்லாத பகுத்தறிவை நீங்கள் அவனுக்குக் கொடுக்கவில்லையா? அதைத்தான் அவன் 'ஆறாவது அறிவு' என்கிறான்!'' என்றது சிங்கம்.

''நாசமாய்ப் போச்சு; அவனுக்கு நான் கொடுத்த சாபமல்லவா அது?''

''சாபமா!''

''சந்தேகமென்ன? எதையும் அறிய முயல்வதும், அறிந்தாலும் அதை உணர முடியாமல் இருப்பதும், உணர்ந்தாலும் அதன்படி நடக்க முடியாமல் தவிப்பதும் நான் அவனுக்குக் கொடுத்த சாபம்தான்!'' என்றார் கடவுள்.

''அந்தச் சாபத்தையா அவன் 'பகுத்தறிவு' என்கிறான்? ஐயோ, வேண்டாம்! அது எங்களுக்கு வேண்டவே வேண்டாம்!'' என்று ஓட்டம் பிடித்தது சிங்கம்.



# 3. உண்மை

மாலை நேரம்: வீட்டுக்குரியவள் வழக்கம்போல விளக்கை ஏற்றி வைத்துவிட்டு அதை வணங்கினாள். அவளைத் தொடர்ந்து அந்த வீட்டிலிருந்த அனைவரும் தங்கள் கன்னங்கள் இரண்டையும் மாறி மாறித்தொட்டு வணங்கினர்.

வளைக்குள் இருந்தபடியே இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு சுண்டெலி, ''இந்த வீட்டில் விளக்குக்கு ஏன் அம்மா, இத்தனை மரியாதை?'' என்று தன் தாய் எலியைக் கேட்டது.

''அது உன்னைப்போல் போக்கிரியாயில்லாமல் எல்லார்க்கும் நல்லதாயிருப்பதால்!'' என்றது தாய் எலி.

''ஓகோ!'' என்று அப்போதைக்குத் தலையை ஆட்டிவிட்டுத் தன்னை உள்ளுக்கு இழுத்துக்கொண்டது சுண்டெலி.

நள்ளிரவு வந்தது; எல்லாரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த அந்த வேளையிலே, சுற்றுமுற்றும் பார்த்தபடி உள்ளே நுழைந்த ஒரு திருடன், வந்ததும் வராததுமாக விளக்கை அணைத்துவிட்டுத் தன் கை வரிசையைக் காட்ட ஆரம்பித்தான்.

அதைக் கண்ட சுண்டெலி தன் தாய் எலியைப் பார்த்து வியப்புடன் கேட்டது.

''எல்லார்க்கும் நல்லதாயிருந்த விளக்கு இந்தத் திருடனுக்கு மட்டும் ஏனம்மா, கெட்டதாய்ப் போய் விட்டது?

தாய் எலி பெருமூச்சுடன் சொல்லிற்று:

''உண்மைதான்; இந்த உலகில் 'நல்லவன்' கூடச் சில சமயம் சிலருக்குக் 'கெட்டவ'னாகத்தான் தோன்றித் தொலைகிறான்!''



# 4. நம்பிக்கை

இரவு மணி பத்து; வீட்டுக்குக் கடைசியாக வந்து சேர்ந்த வீட்டுக்காரர் தெருக் கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டு உள்ளே சென்றார்.

''நன்றி செலுத்துகிறேன்; கடவுளுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்!'' என்றது ஜன்னல்.

''ஏன்?'' என்று கதவு கேட்டது.

''மீனைத் தண்ணீரில் வாழ வைத்ததுபோல மனிதனைக் காற்றில் வாழ வைத்தாரே, அதற்காக!''

''இல்லாவிட்டால்?''

''உன்னைச் சாத்திவிட்டுச் சென்றதுபோல என்னையும் அல்லவா அவர் சாத்திவிட்டுச் சென்றிருப் பார்?''

இதைக் கேட்டதும், ''அந்த வெட்கக்கேட்டை ஏன் கேட்கிறாய்?'' என்று அலுப்பும் சலிப்புமாக ஆரம்பித்த கதவு, திடீரென்று தன் குரலைத் தாழ்த்திக்கொண்டு, ''உன்னிடம் நான் ஒரு ரகசியம் சொல்லட்டுமா?'' என்றது ஜன்னலிடம்.

''சொல்லு?'' என்றது ஜன்னல்.

''இப்பொழுதெல்லாம் மனிதன் தன்னைப்போன்ற மனிதனை நம்புவதில்லை; என்னைப்போன்ற கதவைத் தான் நம்புகிறான்!'' என்றது கதவு.



# 5. நாகரிகம்

'கீ கீ......கூ' என்று கத்தின, கூட்டுக்குள்ளிருந்த குஞ்சுகள்.

''என் அருமைக் குஞ்சுகளா, ஏன் இப்படிக் கத்து கிறீர்கள்?'' என்று கேட்டது, அவற்றுக்கு இரையூட்டிக் கொண்டிருந்த தாய்ப் பறவை.

''அதோ பார், அம்மா! யாரோ ஒருவன் கையில் சுருக்குக் கயிற்றுடன் மரத்தின்மேல் ஏறி வருகிறான், நம்மைப் பிடிக்க!'' என்றது ஒரு குஞ்சு, அவனைத் தன் அலகால் தன்னுடைய தாய்க்குச் சுட்டிக் காட்டி.

தாய்ப் பறவை சிரித்தது; ''ஏன் அம்மா, சிரிக் கிறாய்?'' என்று கேட்டது குஞ்சு.

''அவன் நம்முடைய கழுத்தில் சுருக்கு மாட்ட வர வில்லை; தன்னுடைய கழுத்தில் தானே சுருக்கு மாட்டிக் கொள்ள வருகிறான்!'' என்றது அது.

''அட, பாவமே! அவன் ஏன் அம்மா, தன் கழுத்தில் தானே சுருக்கு மாட்டிக்கொள்ள வேண்டும்?'' என்று கேட்டது இது.

''இவ்வளவு பெரிய உலகத்தில் அவனுக்கு இருக்க இடம் கிடைக்கவில்லையாம்; தின்னச் சோறு கிடைக்க வில்லையாம்......''

''அதெல்லாம் நமக்குக் கிடைக்கும்போது அவனுக்கு மட்டும் ஏன் அம்மா கிடைக்கவில்லை?''

தாய்ப் பறவை சொல்லிற்று:

''அவன் அடைந்த நாகரிகம் அப்படி! அவனும் நம்மைப்போல் இந்த உலகத்தில் எதற்கும் உரிமை கொண்டாடாமல் வாழ்ந்துகொண்டிருந்தபோது, அவனுக்கும் நமக்குக் கிடைப்பதுபோல் எல்லாம்

கிடைத்துக் கொண்டுதான் இருந்தன. அவன் எப்போது 'இது உன்னுடையது, அது என்னுடையது' என்று உரிமை கொண்டாட ஆரம்பித்தானோ, அப்போதே அவனுக்கு இங்கே எதுவுமே உரிமையில்லாமல் போய் விட்டது!''



## 6. விஞ்ஞானி

''இந்த உலகத்தில் இனி யாரும் எனக்கு இணை யில்லை, என்னால் முடியாத காரியமும் இல்லை!'' என்றான் ஒருவன்.

''யாரப்பா, நீ?'' என்று அவனைக் கேட்டார் ஒரு பெரியவர்.

''என்னைத் தெரியவில்லையா? நான்தான் இந்த உலகத்தின் அஞ்ஞான இருளைப் போக்கிக் கொண் டிருக்கும் விஞ்ஞானி!'' என்றான் அவன் அட்டகாசமாக.

''அப்படியா?'' என்று தலையை ஆட்டிக்கொண்டே தமக்கு அருகிலிருந்த ரோஜாச் செடியிலிருந்து, ஒரு மொட்டைப் பறித்து அவனிடம் கொடுத்து, ''எங்கே, இதைக் கொஞ்சம் மலர வையப்பா பார்ப்போம், உன் விஞ்ஞானத்தால்?'' என்றார் பெரியவர் அமைதியாக.

''பூ! இதென்ன பிரமாதம்!'' என்று அதை அலட்சிய மாக வாங்கி முகர்ந்துகொண்டே தன் ரசாயன அறைக்குள் நுழைந்தான் அவன். அங்கே என்ன முயன்றும் அந்த மொட்டு அவன் எதிர்பார்த்தபடி அவ்வளவு இயற்கையாக மலரவில்லை; அதற்காகப் பொறுமை இழந்து அவனும் அதை விட்டுவிடவில்லை.

இந்த முயற்சியில் அன்றைய இரவும் கழிந்து மறு நாள் பொழுதும் விடிந்தது. செடிகளிலிருந்த மற்ற மொட்டுக்கள் அத்தனையும் வழக்கம்போல் மலர்ந்து மணம் பரப்பின. அந்த மணம் வந்த திசையை நோக்கித் தற்செயலாகத் திரும்பிய விஞ்ஞானி, ''இத்தனை மொட்டுக்களையும் இவ்வளவு அழகாக இவற்றுக்கு அருகில்கூட வராமல் மலர வைத்தது யார்?'' என்றான் வியப்புடன்.

பெரியவர் சிரித்தார்; ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டான் விஞ்ஞானி.

''உன்னைப் பார்த்துச் சிரிக்காமல் அழவா சொல்கிறாய்?'' என்றார் பெரியவர்.



# 7. ஒருமைப்பாடு

**ஊ**ருக்கு அப்பாலிருந்த காட்டிலே மந்தை மந்தை யாக ஆடுகள் மேய்ந்துகொண்டிருந்தன. 'ஏதாவது ஓர் ஆடு தன்னந் தனியாகத் தன்னை நோக்கி வராதா, தன் பசி தீராதா?' என்ற ஏக்கத்துடன் ஓநாய் ஒன்று அந்த ஆட்டு மந்தைகளை வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தது. ஊஹூம், எந்த ஆடும் தனித்து வரவில்லை!

ஒருமைப்பாட்டில் மனிதர்களுக்கு இல்லாத நம்பிக்கையா இந்த ஆடுகளுக்கு? அதிலும் அந்தப் பாழாய்ப்போன ஒருமைப்பாடு தன்னுடைய பசியைத் தீர்த்துக் கொள்ள உதவாதபோது?

ஆத்திரம் தாங்கவில்லை ஓநாய்க்கு. எனவே அது ஆட்டு மந்தைக் கூட்டத்தை நோக்கி, ''ஏ அறியாமை மிக்க ஆடுகளே!'' என்று தன்னைத் தானே 'அறிஞ'னாக நினைத்துக்கொண்டு குரல் கொடுத்தது.

ஆடுகள் திரும்பின; ''மனிதர்கள் சொல்வது சரி தான், உங்களைப்பற்றி மனிதர்கள் சொல்வது சரிதான்!'' என்று அவற்றைப் பார்த்துத் தலையை மேலுங் கீழுமாக ஆட்டிற்று ஓநாய்.

''என்ன சொல்கிறார்கள், அண்ணாச்சி?'' என்று ஏதும் அறியாததுபோல் கேட்டு வைத்தது அவற்றில் ஒன்று, கொஞ்சம் துணிந்து முன்னால் வந்து நின்று.

''கண்ணை மூடிக்கொண்டு யாராவது ஒருவரைத் தங்களைச் சேர்ந்த ஒரு கூட்டம் பின்பற்றிச் சென்றால், அந்தக் கூட்டத்தை அவர்கள் ஆட்டு மந்தைக் கூட்டம் என்று கேலி செய்கிறார்கள். அதாவது, அவர்களுக்கும் சுய புத்தி கிடையாதாம், உங்களுக்கும் சுய புத்தி கிடையாதாம்!''

''அதற்காக?''

''தனித்து வாழுங்கள், தன்மானம் பேணுங்கள்!''

''கூடி வாழ்வது?''

''கோழைத்தனம்!''

''உம்முடைய போதனை புதிய போதனையா யிருக்கிறதே?''

''ஆம், புத்தம் புதிது தம்பி, புத்தம் புதிது! வா; பிரிந்து வா! நல்லவனுக்கு இந்த உலகத்தில் பயமும் இல்லை; பகைவனும் இல்லை. வா, பிரிந்து வா!'' என்று அதை அழைத்தது ஓநாய்.

''வருகிறேன்; ஆனால் ஒரு நிபந்தனை!'' என்றது ஆடு.

''என்ன நிபந்தனை?''

''நான் உம்முடன் வருவதற்கு முன்னால் நீர் என்னுடன் வர வேண்டும்!''

''எங்கே?''

''ஊருக்கு!''

''எதற்காக?''

''நீர் நல்லவரா, கெட்டவரா என்பதை நான் சந்தேகத்திற்கு இடமின்றித் தெரிந்துகொள்வதற்காக!'' என்று சொல்லிக்கொண்டே ஆடு நடந்தது. அதற்குமேல் ஓநாய் என்ன செய்யும், பாவம்! ஆசை முன்னால் தள்ள, அச்சம் பின்னால் இழுக்க, ''சரி, வருகிறேன்!'' என்று அக்கம் பக்கம் பார்த்துகொண்டே அதைத் தொடர்ந்தது.

ஊரின் எல்லையை மிதித்ததுதான் தாமதம், ''இப்போதாவது தெரிந்துகொண்டாயா, நான் நல்லவனா இல்லையா என்பதை? வா, சீக்கிரம் வா!'' என்று காட்டைக் காட்டி, அவசர அவசரமாக ஆட்டை அழைத்தது ஓநாய்.

''நல்லவர்கள் காட்டிலே வாழ்வானேன், நாட்டி லேயே வாழலாமே?'' என்றது ஆடு, நின்ற இடத்தி லேயே நின்று.

இந்தச் சமயத்தில் குப்பைமேட்டை மொய்த்துக் கொண்டிருந்த கோழிகள் தன்னைக் கண்டதும் கொக் கரித்துக்கொண்டே ஓடி ஒளிய, ''பார்த்தாயா, உங்கள் நாட்டிலே கெட்டவர்கள் மலிந்து கிடப்பதை?'' என்று பேச்சை மாற்றிப் பார்த்தது ஓநாய்.

''கெட்டவர்களா, யார் அவர்கள்?'' என்று ஆடு கேட்டது.

''என்னைக் கண்டதும் கோழைகள்போல் ஓடி ஒளியும் அந்தக் கோழிகளைத்தான் சொல்கிறேன்!'' என்றது ஓநாய்.

அப்போது கோழிகளின் கூக்குரலைக் கேட்டுக் குடிசையை விட்டு வெளியே வந்த ஒரு விவசாயி, ''டோய், ஓநாய்டோய்!'' என்று குரல் கொடுக்க, அந்தக் குரலைத் தொடர்ந்து ஏழெட்டுப் பேர் கம்பும் கையுமாக ஓடி வர, 'நடித்தது போதும்!'' என்று எடுத்தது ஓட்டம் ஓநாய்!

''ஐயா, நல்லவரே! ஏன் ஓடுகிறீர்கள்? உமக்குத்தான் பயமும் இல்லை, பகைவனும் இல்லையே? ஏன் ஓடுகிறீர்கள்? நில்லுங்கள் அண்ணாச்சி, நில்லுங்கள்!'' என்று தன்னால் ஆனமட்டும் அதை அழைத்துப் பார்த்தது ஆடு.

ஓநாய் நிற்கவில்லை!



# 8. பத்தாவது ரத்தினம்

'ஒருமைப்பாட்டுக் குழு' என்று ஒன்றும் நிறுவாமலே ஒற்றுமையாயிருந்து வந்த ஒன்பது ரத்தினங்களுக்குள், 'நம்மில் யார் பெரியவன்?' என்று ஒரு நாள் சண்டை வந்துவிட்டது.

நானே பெரியவன்!'' என்றது வைரம்.

இல்லை, நானே பெரியவன்!'' என்றது வைடூரியம்,

''அட கடவுளே, இந்தச் சண்டையைத் தீர்த்து வைக்க ஒரு வழியும் இல்லையா?'' என்று தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டது கோமேதகம்.

''இருக்கிறது!'' என்றது மரகதம்.

''என்ன?'' என்று ஆவலுடன் கேட்டது நீலம்.

''நமக்குள் ஒரு போட்டி வைத்துக்கொள்வோம்; அந்தப் போட்டியில் எவன் வெற்றியடைகிறானோ, அவனே பெரியவன் என்று நாம் ஒப்புக்கொள்வோம்!'' என்றது மரகதம்.

''என்ன போட்டி அது?'' என்று எல்லோரையும் முந்திக்கொண்டு முன்னால் வந்து கேட்டது வைரம்.

''பேராசை பிடித்த மனிதனை, நம்மில் எவன் 'போதும் போதும்' என்று சொல்ல வைக்கிறானோ, அவனே நமக்கெல்லாம் பெரியவன். என்ன சொல்கி றீர்கள், நீங்கள்?'' என்று கேட்டுவிட்டு, எல்லா வற்றையும் சேர்ந்தாற்போல் ஒரு பார்வை பார்த்து வைத்தது மரகதம்.

அவ்வளவுதான்; ''சரியான யோசனை! சரியான யோசனை!'' என்று எல்லா ரத்தினங்களும் ஏககாலத்தில் தலையை ஆட்டின.

''சரி; நீ போ முதலில்!'' என்றது மரகதம் வைரத்தை நோக்கி.

வைரம் சென்றது; ஆனால் வாட்டத்துடன் திரும்பி வந்தது.

''என்ன?'' என்று கேட்டது மரகதம்.

''முடியவில்லை அப்பனே, முடியவில்லை; அவனைத் திருப்தி செய்ய என்னால் முடியவில்லை!'' என்று கையை விரித்தது வைரம்.

''சரி, நீ போ இரண்டாவதாக!'' என்றது மரகதம் வைடூரியத்தை நோக்கி.

வைடூரியம் சென்றது; ஆனால் அதுவும் வாட்டத் துடன் திரும்பி வந்தது.

''என்ன?'' என்று கேட்டது மரகதம்.

''முடியவில்லை அப்பனே, முடியவில்லை; என்னாலும் அவனைத் திருப்தி செய்ய முடியவில்லை!'' என்று அதுவும் கையை விரித்தது.

இப்படியே ஒன்பது ரத்தினங்களும் சென்று தோல்வி யுற்றுத் திரும்பிய பிறகு, ''நான் திருப்திப்படுத்துகிறேன் அவனை!'' என்றது ஒரு குரல்.

''அது யாரப்பா, அது?'' என்று எல்லா ரத்தினங் களும் குரல் வந்த திசையை நோக்கித் திரும்பின.

''நான்தான் பத்தாவது ரத்தினம், அப்பா!'' என்றது அது.

''பத்தாவது ரத்தினமா, பைத்தியம் பிடித்த ரத்தினமா?'' என்று மரகதம் கேட்டது.

''வீண் பேச்சு எதற்கு? வேண்டுமானால் என்னை அனுப்பிப் பார்!'' என்றது அது.

''சரி, வா போவோம்!'' என்றது மரகதம்.

''நீங்களும் என்னுடன் வருகிறீர்களா, என்ன?'' என்று கேட்டது அது.

''ஆமாம், உன்னுடைய லட்சணத்தைப் பார்க்க வேண்டாமா?'' என்றது கோமேதகம்.

''சரி, வாருங்கள்!'' என்று பத்தாவது ரத்தினம் கிளம்ப, மற்ற ஒன்பது ரத்தினங்களும் அதைப் பின் தொடர்ந்தன.

பாவம் மனிதன், பத்தாவது ரத்தினம் அவனுக்கு முன்னாலிருந்த இலையில் 'கொட்டு, கொட்டு' என்று கொட்டியதுதான் தாமதம், ''போதும், போதும்!'' என்று அலறவே ஆரம்பித்துவிட்டான்!

''தேவலையே! உன் பெயர் என்னப்பா?'' என்று தன் எண் சாண் உடம்பையும் ஒரு சாணாகக் குறுக்கிக் கொண்டு கேட்டது மரகதம்.

''ஜீவரத்தினம்! 'அரிசி' என்றும் 'அன்னம்' என்றும் கூட அடியேனை அழைப்பதுண்டு!'' என்றது அது.



## 9. சாட்சி

வழக்கம்போல் அன்றும் தன் காதலியை யாரும் காணாத இடத்தில் சந்தித்தான் காதலன்.

''கடைசிவரை என்னை நீங்கள் கைவிட மாட்டீர்களே?'' என்றாள் அவள்.

''உன்னையாவது, கைவிடுவதாவது? இந்த ஜன்மத்தில் இல்லை!''என்றான் அவன்.

''உண்மையாகவா?''

''சந்திர சூரியர் சாட்சியாகச் சொல்கிறேன், இது சத்தியம்! ஆகாசவாணி பூமாதேவி சாட்சியாகச் சொல்கிறேன், இது சத்தியம்!'' என்று கைமேல் கையாக அடித்துக் கொடுத்தான் அவன்.

''அதைவிட யாராவது ஒரு புரோகிதரையோ, பதிவாளரையோ சாட்சியாக வைத்துக்கொண்டால்?'' என்றாள் அவள்.

''நிலையான சாட்சி இருக்கும்போது நிலையற்ற சாட்சி நமக்கு ஏன் கண்ணே?'' என்று காதலன் உருகினான்.

''நிலையற்ற நமக்கு நிலையான சாட்சி ஏன் கண்ணாளா?'' என்று காதலி ஊடினாள்.

அவ்வளவுதான்; அன்று போனவனை அதற்குப் பின் அவள் பார்க்கவேயில்லை!



## 10. வெற்றி

''உலகமே உலகமே! இன்னும் நீ ஏன் உருப்பட வில்லை?'' என்றான் மனிதன்.

''எல்லாம் உன்னால்தான்!'' என்றது உலகம்.

''என்னாலா!''

''ஆம்; உன்னால்தான்! உன்னுடைய பலவீனத்தால் தான்!'' என்று அடித்துச் சொல்லிற்று உலகம்.

மனிதன் சிரித்தான்; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது உலகம்.

''உன்னுடைய அறியாமைக்காகத்தான் சிரிக் கிறேன்!'' என்றான் மனிதன்.

''என்னுடைய அறியாமைக்காகவா?''

''ஆம். மண்ணை நான் வென்றிருக்கிறேன்; விண்ணை நான் வென்றிருக்கிறேன்; காற்றை நான் வென்றிருக்கிறேன்; நெருப்பை நான் வென்றிருக் கிறேன்; கடவுளையே நான் பல விஷயங்களில் வென்றிருக்கிறேன். அப்படியிருக்க என்னை நீ பலவீனன் என்கிறாயே, உன்னுடைய புத்திசாலித் தனத்தை என்னவென்று சொல்ல?'' என்றான் மனிதன்.

உலகம் சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டான் மனிதன்.

''உன்னுடைய அறியாமைக்காகத்தான் சிரிக்கிறேன்!'' என்றது உலகம்.

''என்னுடைய அறியாமைக்காகவா!''

''ஆம், எதை வென்று என்ன பிரயோசனம்? உன்னை நீ வெல்லவில்லையே? அதனால்தான் இன்னும் நான் உருப்படாமல் இருக்கிறேன்!'' என்றது உலகம்.



# 11. இன்பம்

கல் ஒன்று இடறிற்று; கட்டை விரலின் நகம் பெயர்ந்து ரத்தம் 'குபுகுபு'வென்று வழிந்தது.

''ச்சூச்சூ!'' என்றது வாய்; கண்கள் கண்ணீர் சிந்தின. வாய் சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கண்கள் கேட்டன.

''ஒன்றுமில்லை; உங்களுடைய அசட்டுத்தனத்தை எண்ணிச் சிரிக்கிறேன்!''என்று கூறியது வாய்.

ஆணியை அடித்துக்கொண்டிருந்த சுத்தியல் தவறிற்று; அதைப் பிடித்துக் கொண்டிருந்த கை அதனால் அடிபட்டு வீங்கிற்று.

''ச்சூச்சூ'' என்றது வாய்; கண்கள் கண்ணீர் சிந்தின. வாய் சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டன, கண்கள்.

''ஒன்றுமில்லை; உங்களுடைய அசட்டுத்தனத்தை எண்ணிச் சிரிக்கிறேன்!'' என்று கூறியது வாய்.

**வா**சற்கால் 'டங்'கென்று மோதிற்று; தலை 'விண், விண்' என்று வலித்தது.

''ச்சூச்சூ!'' என்றது வாய்; கண்கள் கண்ணீர் சிந்தின. வாய் சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கண்கள் கேட்டன.

''ஒன்றுமில்லை; உங்களுடைய அசட்டுத்தனத்தை எண்ணித்தான் சிரிக்கிறேன்!'' என்றது வாய்.

**ம**ண்ணை வாரி விட்டது காற்று; கண்கள் அருவிச் சிவந்து கண்ணீர் வடித்தன.

''அசட்டுப் பயல்களா! மற்றவர்கள் துன்பத்துக் குள்ளானபோது நீங்கள் கண்ணீர் விட்டு அழுதீர்களே, இப்பொழுது யாராவது உங்களுக்காக அழுகிறார்களா?'' என்று கேட்டது வாய்.

இப்போது கண்கள் சிரித்துக்கொண்டே கூறின:

''அதை எதிர்பார்த்தால் இந்த உலகத்தில் இன்பம் என்று ஒன்று இருக்கவே இருக்காது அப்பனே, இருக்கவே இருக்காது!''



## 12. மனிதர்கள், ஜாக்கிரதை!

''அம்மா! ஒரு கவளம் அன்னம் இருந்தால் கொடுங்கள், அம்மா!''

''ஐயா! ஒரு கவளம் அன்னம் இருந்தால் கொடுக்கச் சொல்லுங்கள், ஐயா!''

'கேட்'டுக்கு வெளியே நின்று, மாறி மாறிக் குரல் கொடுத்துப் பார்த்தான் அந்தப் பிச்சைக்காரன். 'உண்டு'

என்று சொல்வாரும் இல்லை; 'இல்லை' என்று சொல்வாரும் இல்லை.

கொஞ்சம் துணிந்து, மெல்லக் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே சென்றான். அவ்வளவுதான்; ''புத்தி இருக்கிறதா, உனக்கு? இல்லை கேட்கிறேன்; புத்தி இருக்கிறதா, உனக்கு?'' என்று சீறிக்கொண்டே அவனை நோக்கிப் பாய்ந்து வந்தார் அந்த வீட்டுக்காரர்.

அவன் சற்றே பின் வாங்கி, ''கோபித்துக் கொள்ளாதீர்கள் ஐயா! பசி வயிற்றைக் கிள்ளுகிறது; ஒரு பிடி சோறு இருந்தால் போடச் சொல்லுங்கள், ஐயா!'' என்றான் பரக்க விழித்து, பல்லை மிகக் காட்டி.

அவன் சொன்னதை அவர் காதில் போட்டுக் கொள்ள வில்லை; ''நான் கேட்பதற்குப் பதில் சொல்; புத்தி இருக்கிறதா, உனக்கு? இல்லை கேட்கிறேன்; புத்தி இருக்கிறதா, உனக்கு?'' என்று மறுபடியும் கேட்டுக் கொண்டே முன்னேறி, ''இங்கே பார், என்ன எழுதி யிருக்கிறது?'' என்றார் கேட்டின் முகப்பில் மாட்டப் பட்டிருந்த சிறு 'போர்டு' ஒன்றைச் சுட்டிக் காட்டி.

அவன் பார்த்தான்; பார்த்துவிட்டு, ''நாய்கள் ஜாக்கிரதை என்றுதானே எழுதியிருக்கிறது?'' என்றான் ஒன்றும் புரியாமல்.

''அதைப் பார்க்காமல் உள்ளே வரலாமா? இல்லை, கேட்கிறேன்; அதைப் பார்க்காமல் உள்ளே வரலாமா?'' என்று இரைந்தார் அவர்.

''மன்னியுங்கள்; 'மனிதர்கள்தானே உள்ளே இருக்கப் போகிறார்கள்' என்று நான் நினைத்தது தப்புத்தான்!'' என்றான் அவன் அமைதியாக.



## 13. சட்டம்

பஞ்சத்தின்மேல் ஏறி, பசி ஊர்வலம் வந்து கொண்டிருந்தது.

''இனி எனக்கு இங்கே இடமில்லை!'' என்றது அன்பு.

''எனக்கும் அதே கதிதான்!'' என்றது பண்பு.

வெட்கம், ''இனி என்னை யார் பொருட்படுத்தப் போகிறார்கள்?'' என்றது வேதனையுடன்.

வேட்கை, ''ரொம்ப நல்லதாய்ப் போயிற்று; நீ என்று தொலைகிறாயோ, அன்றுதான் எனக்கு நிம்மதி!'' என்றது மகிழ்ச்சியுடன்.

இதைக் கேட்டுக்கொண்டே வந்த மானம், ''மனிதன் போகிற போக்கைப் பார்த்தால் என்னைக்கூடத் துறந்து விடுவான் போலிருக்கிறது!'' என்றது பெருமூச்சுடன்.

''உனக்கே அந்தக் கதி என்றால், எனக்கு என்ன கதி?'' என்றது மரியாதை.

அப்போது ஈகை தலை குனிந்தபடி அங்கே வர, ''உன்னுடைய நிலையும் அதே நிலைதானா?'' என்று கேட்டது இரக்கம்.

''அதில் வேறு சந்தேகமா?'' என்றது பொய்.

''இல்லை அப்பனே, இல்லை; என்னைப் பொறுத்த வரை அதில் எனக்குச் சந்தேகமே இல்லை. ஏனெனில், 'பசி வந்திடப் பத்தும் பறந்து போம்' என்பது எனக்குத் தெரியும்!'' என்றது உண்மை.

இந்தச் சமயத்தில் யாரோ கலகலவென்று நகைக்கவே, ''யார் அது?'' என்று கேட்டுக்கொண்டே திரும்பிப் பார்த்தது ஊக்கம். ''கவலை வேண்டாம்; உங்கள் அனைவரையும் காப்பாற்ற நான் இருக்கிறேன்!'' என்றது சட்டம்.

''பூ, நீதானா! எங்களை நீ காப்பாற்றுவது ஒரு பக்கம் இருக்கட்டும்; முதலில் உன்னை நீயே காப்பாற்றிக் கொள்ள முடிகிறதா என்று பார்!'' என்றது அது.

''ஏன் முடியாது?'' என்று அதைத் திருப்பிக் கேட்டது இது.

''அதோ பார், அந்தப் பட்டினியை? அரிசி வைத்துக் கொண்டே 'இல்லை' என்று சொன்னதற்காக அது ஒரு வியாபாரியைக் குத்திக் கொன்றுவிட்டது!'' என்றது ஊக்கம்.

''இவ்வளவுதானே? இதோ பார், அந்தப் பட்டினியை நான் என்ன செய்கிறேன் என்று!'' என்று சூள் உரைத்துக்கொண்டே விரைந்தது சட்டம்.

அதற்குள் அந்தப் பட்டினி தன்னையும் குத்திக் கொன்றுகொண்டுவிடவே, ''இப்போளது அதை உன்னால் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டது ஊக்கம்.

''ஒன்றும் செய்ய முடியாது அப்பனே, ஒன்றும் செய்ய முடியாது!'' என்று தன் தோல்வியை ஒப்புக் கொண்டது சட்டம்.



# 14. வாலும் தலையும்

ஒரு நாள் நாயிடம், ''உன்னைக் கண்டால் எனக்கு மட்டுமல்ல, மனிதர்களுக்குக்கூட பொறாமையா யிருக்கிறது!'' என்றது பூனை.

''ஏனாம்?'' என்று கேட்டது நாய்.

''வாலை ஆட்டியாட்டிக் காட்டியே நீ பிழைத்துக் கொள்கிறாயல்லவா, அதனால்தான்!'' என்றது பூனை சிரித்துக்கொண்டே.

நாய் அதைத் திருப்பிக் கேட்டது;

''மனிதர்களில் சிலர் தலையை ஆட்டியாட்டிக் காட்டியே பிழைத்துக்கொள்கிறார்களே, அதற்கென்ன சொல்கிறாய், நீ?''

பூனை வாயைத் திறக்கவில்லை.



# 15. நீதி

பொற்கொல்லருக்கு எதிர்த்தாற்போல் இருந்த கண்ணாடிக் கூண்டுக்குள், 'நீதியின் சின்னம் நானே!' என்பதுபோல் தராசு தலை நிமிர்ந்து நின்று கொண் டிருந்தது.

அந்தத் தராசின் ஒரு தட்டில் தங்கத்தையும், இன்னொரு தட்டில் தாமிரத்தையும் வைத்து நிறுத்தார் பொற்கொல்லர்.

தங்கம் வைத்த தட்டு தாழ்ந்தது; தாமிரம் வைத்த தட்டு உயர்ந்தது!

''அநியாயம், அக்கிரமம்! நீதிமானான நீகூடவா வலியவனைத் தாழ்த்தி, எளியவனை உயர்த்திக் காட்டுவது?'' என்று தங்கம் பொருமிற்று.

''அவசரப்படாதே, என்னுடைய முள்ளைக் கவனி!'' என்றது தராசு.

முள்ளைக் கவனித்த தங்கத்தின் முகம் மலர்ந்தது. ஏனெனில், அது எளியவன் பக்கம் சாயவில்லை; வலியவன் பக்கமே சாய்ந்திருந்தது!



## 16. அகம்பாவம்

'விர், விர்ர்!' என்று பறந்தது ஒரு கரப்பான்.

''இந்த வீட்டில் எங்கேயோ தேள் இருக்கிறது; அதனால்தான் கரப்பான் பறக்கிறது!'' என்றார் அந்த வீட்டுப் பெரியவர், அதை விரட்டிக்கொண்டே.

அதை விரும்பாத தேள், ''நண்டு கொழுத்தால் வளையில் இருக்காது என்பார்கள்; அதே மாதிரி நீயும் கொழுத்தால் ஒரு மூலையில் இருக்க மாட்டாய் போலிருக்கிறது!'' என்றது தனக்கருகே வந்து அமர்ந்த கரப்பானிடம்.

''இல்லாவிட்டால் இந்த வீட்டில் நான் ஒருவன் இருக்கிறேன் என்பது எப்படித் தெரிவதாம்?'' என்றது கரப்பான், அதைப் பொருட்படுத்தாமல்.

''அப்படியா சங்கதி?'' என்று தேள் அதை ஒரு கொட்டு கொட்டிற்று.

துடியாய்த் துடித்த கரப்பான் அழுதுகொண்டே கேட்டது:

''என்னை ஏன் கொட்டினாய்''

தேள் சிரித்துக்கொண்டே சொல்லிற்று:

''இல்லாவிட்டால் இந்த வீட்டில் நான் ஒருவன் இருக்கிறேன் என்பது எப்படித் தெரிவதாம்?''



# 17. படைப்பின் விசித்திரம்

மடக்கி வைத்த காலுக்குக் கீழே மிருதங்கத்தை இடுக்கி வைத்துக்கொண்டு, 'வெளு, வெளு' என்று வெளுத்துக்கொண்டிருந்தார் மிருதங்கக்காரர்.

''ஐயோ, பாவம்!'' என்றது பிடில்.

''ஏனாம்?'' என்று கேட்டது கஞ்சிரா.

''என்னதானிருந்தாலும் இப்படியா அடிப்பார்கள், மிருதங்கத்தை?'' என்றது அது.

''அடிக்காமல் தட்டியா கொடுப்பார்கள்?'' என்றது இது.

''ஏன், என்னவர் என்னை மீட்டுவதுபோல் அதனவர் அதையும் மீட்டினால் என்னவாம்?'' என்று தம்பூரா கேட்டது.

கஞ்சிரா பெருமூச்சுடன் சொல்லிற்று:

''உன்னை மீட்டினால் ஓசை கிளம்பிவிடுகிறது; என்னையும் மிருதங்கத்தையும் அடித்தால்தானே ஓசை கிளம்புகிறது!''



## 18. மாடும் மனிதனும்

ஒரு தடவைக்கு ஒன்பது தடவையாகத் தன்னை விற்றவனைத் தேடிக்கொண்டு வந்தது மாடு.

வாங்கினவனுக்கு ஆத்திரம் தாங்கவில்லை; ''இனிமேல் இங்கு வருவாயா, இனிமேல் இங்கு வருவாயா?'' என்று அதை 'வாங்கு, வாங்கு' என்று வாங்கிவிட்டான்.

வீறிட்டலறிய மாட்டை நோக்கி அதனுடன் வசித்த ஆடு கேட்டது:

''விற்றவன் உன்னை அன்றே மறந்துவிட்டதுபோல் நீயும் அவனை அன்றே மறந்துவிட்டிருந்தால் இந்தக் கதிக்கு ஆளாகி யிருக்கமாட்டாயல்லவா?''

கண்ணீரும் கம்பலையுமாக மாடு சொல்லிற்று:

''அது எப்படி முடியும்? நான் மனிதனாகப் பிறக்காமல் மாடாக அல்லவா பிறந்துவிட்டேன்?''



## 19. குற்றம் எங்கே?

''நீல வானம், நெடுங்கடல், பனி மூடிய மலைச் சிகரங்கள், பழம் உதிரும் சோலைகள், பசுமை நிறைந்த நெல் வயல்கள், பூத்துக் குலுங்கும் செடிகள் கொடிகள், கொட்டும் அருவி, குளிர் தருக்கள்-ஆஹா! இந்த உலகமே ஓர் அற்புதம், அற்புதம்!'' என்று பாடிய வானம் பாடியுடன் சேர்ந்து, அதன் பாட்டுக்கேற்பத் தானும் தன் தோகையை விரித்து ஆடியது மயில்.

அப்போது, ''அட, குருடர்களே! நீங்கள் உலகத்தைப் பார்த்த லட்சணம் இதுதானா? சரியாய்ப் பாருங்கள், நீங்கள் அளப்பவையனைத்தையும் அதில் தலைகீழாகத் தொங்கிக்கொண்டிருப்பது உங்களுக்குத் தெரியும்!'' என்றது ஒரு குரல்.

''யார் அது?'' என்று கேட்டுக்கொண்டே வானம்பாடியும் மயிலும் அந்தக் குரல் வந்த திசையை நோக்கித் திரும்பின.

ஆலமரத்தின் கிளையொன்றில் அதைச் சொன்ன வௌவால் தலைகீழாகத் தொங்கிக்கொண்டிருந்தது!



## 20. சமதர்மம்

கடைத் தெருவைக் கூட்டம் வந்து மொய்க்கும் நேரம். தன் கடையிலிருந்த பழங்கள் அனைத்தையும் ஒவ்வொன்றாக எடுத்துத் துடைத்து வைத்துக் கொண் டிருந்தான் கடைக்காரன்.

புது மெருகு ஏற்றப்பட்ட ஆரஞ்சுப் பழம் ஆற்றாமையுடன் பொருமிற்று:

''நம்மையெல்லாம் துடைத்து வைப்பதோடு சரி; அந்த ஆப்பிள் பழத்துக்கு மட்டும்......''

''என்னவாம்?'' என்று இடைமறித்துக் கேட்டது திராட்சை.

''வெள்ளைக் கலை உடுத்தி, வெள்ளைப் பணி பூண்டு, வெள்ளை அரியாசனத்தில் ஏற்றி......''

''ஓ! அதைச் சுற்றி வைத்திருக்கும் அந்த மெல்லிய வெள்ளைக் காகிதத்தைச் சொல்கிறாயா? ஆமாம் ஆமாம், அதற்கு எப்போதுமே ஒரு தனி அலங்காரம் தான்!'' என்று அது சொன்னதை திராட்சை ஆமோதித்தது.

''ஏன், இருக்கக் கூடாதா? அது உன்னைப்போல் கன்னங்கரேலென்றா இருக்கிறது? எப்போதுமே அது தன் அழகிலும் தனி, மதிப்பிலும் தனி!'' என்றது அன்னாசி.

மாதுளை திரும்பி, ''யாரது, பைன் ஆப்பிள் ஸாரா? யு ஆர் கரெக்ட்! முள்ளம் பன்றிபோல் இருக்கும் உமக்குச் சாதாரண பன்றிபோல் இருக்கும் ஆப்பிள் தன் அழகிலும் தனியாய்த்தான் தெரியும், மதிப்பிலும் தனியாய்த்தான் தெரியும்!'' என்றது எரிச்சலுடன்.

அப்போது அழுகிப்போன ஆரஞ்சுப்பழம் ஒன்றோடு, கன்றிப்போன ஆப்பிள் பழம் ஒன்றையும் எடுத்துக் கடைக்காரன் குப்பைத் தொட்டியில் விட்டெறிய, ''வாழ்க, சமதர்மம்!'' என்றது வாழைப் பழம்.

''நாசமாய்ப் போச்சு! வாழும்போது இல்லாத சமதர்மம் சாகும்போது எதற்காம்?'' என்றது ஆரஞ்சு.

''ஸ், பேசாதே! மனிதர்களுக்குச் சமதர்மம் சுடு காட்டில் கிட்டுவதுபோல, நமக்குக் குப்பைத் தொட்டியி லாவது கிட்டட்டும்!'' என்று சொல்லி, அதன் வாயை அடக்கிற்று திராட்சை.



## 21. பெருமை

''என்னால்தான் நேரம் ஓடுகிறது!'' என்றது கடிகாரம்.

''என்னால்தான் காலம் ஓடுகிறது!'' என்றது காலண்டர்.

''இவை இரண்டும் இப்படிப் பீற்றிக் கொள்கின் றனவே, அந்தச் சூரியன் மட்டும் ஏன் வாயைத் திறக்க மாட்டேன் என்கிறது?'' என்று வானத்தை நோக்கிக் கேட்டது பூமி.

அதற்குப் ''பீற்றிக்கொள்ள வேண்டிய அவசிய மில்லை!'' என்றது வானம்.



## 22. காதல்

மலர் விரிந்து மணம் பரப்பிற்று; அந்த மணத் தையே தனக்கு விடுத்த அழைப்பாகக் கொண்டு அதைத் தேடி வந்தது ஒரு வண்டு.

ரீங்......ரீங்......ரிரி......ரீங்......

''வந்துவிட்டயா, என்னைச் சுற்றிச் சுற்றி வந்து ரீங் காரம் பாட?'' என்றது மலர், தென்றலில் சற்றே அசைந்து.

''நானா வந்தேன்? மனம் கவரும் உன் மணமல்லவா என்னை இங்கே வரவழைத்தது? மகிழ்வூட்டும் உன் அழகல்லவா என்னைப் பாட வைத்தது?'' என்று அடுக்க ஆரம்பித்தது வண்டு.

''போதும், யாராவ்து கேட்டால் சிரிக்கப் போகி றார்கள்!'' என்று மலர் ஊடிற்று.

''யார் சிரித்தால் என்ன, அந்தச் சிரிப்பெல்லாம் உன் சிரிப்புக்கு ஈடாகுமா?'' என்று வண்டு அதைக் கூட நெருங்கிற்று.

மலர் பொறுமை இழந்து,''யாரை ஏமாற்ற இந்தப் பேச்செல்லாம்?'' என்று கடுகடுத்தது.

'ஐயோ, இது அபாண்டம்! யுகம் யுகமாக உன்னைக் காதலிக்கும் நானாவது, உன்னை ஏமாற்றுவதாவது?'' என்றது வண்டு, பரிதாபமாக.

மலர் சிரித்தது;''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது வண்டு.

''ஒன்றுமில்லை, என்னை நீ ஏன் காதலிக் கிறாயாம்?'' என்றது மலர் கேலியாக.

''இது என்ன கேள்வி, உன்மேல் கொண்ட அன்புக் காக!'' என்றது வண்டு.

''ம், அப்புறம்?''

''நீ இல்லாமல் நான் வாழ முடியாது என்பதற்காக!''

''உண்மையாகவா?''

''சத்தியமாக!''

'இந்தச் சத்தியத்துக்கு மேல் மலர் தன்னைக் கேட்ப தற்கு என்ன இருக்கிறது?' என்று நினைத்த வண்டு, மறுபடியும் அதை மெல்ல நெருங்கிற்று.

''எட்டி நில்!'' என்றது அது.

''ஏன்?'' என்று கேட்டது இது.

''பொய்; நீ சொன்னவை யனைத்தும் சுத்தப் பொய்!''

''பொய்யா!''

''ஆமாம்; எதற்காக நீ என்னைக் காதலிக்கிறாய் என்று எனக்குத் தெரியும்!''

''எதற்காக?''

''என்னிடம் இருக்கும் தேனைச் சுவைப்பதற்காக!''

இதைக் கேட்டதும் வண்டு சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது மலர்.

''நதி மூலம், ரிஷி மூலத்தைப்போலக் காதல் மூலத்தையும் ஆராயக் கூடாது பெண்ணே, காதல் மூலத்தையும் ஆராயக் கூடாது!'' என்றது வண்டு.



## 23. தெய்வம்

தான் விரித்த வலையில் விழுந்த ஈ ஒன்றைத் தாவிப்பிடித்தது சிலந்தி.

''ஐயோ, என்னைக் கொல்லாதே! எளியாரை வலியார் அடித்தால் வலியாரைத் தெய்வம் அடிக்கும்!'' என்று அலறியது ஈ.

''கவலைப்படாதே, அந்தத் தெய்வத்தைத்தான் இப்போது நீ பார்க்கப் போகிறாய்!'' என்று சொல்லிக் கொண்டே, சிலந்தி அதை விழுங்கி வைத்தது.

அடுத்த கணம் தன்னை யாரோ கவ்விப் பிடிப்பது போலிருக்கவே, ''யார் அது?'' என்று மிகுந்த கோபத்துடன் கேட்டது சிலந்தி.

''நான்தான் தெய்வம்!'' என்றது பல்லி.



# 24. கருணை

தூண்டில் முள்ளில் குத்தப்பட்டிருந்த ஒரு புழு துடித்துக் கொண்டிருந்தது. அதைப் பார்த்த ஒரு மீன், ''ஆஹா, மனிதனின் கருணையே கருணை! எனக்காக அவன் எங்கேயோ இருந்த புழுவைத் தேடிப் பிடித்து, தூண்டில் முள்ளில் வேறு குத்தி, தண்ணீருக்குள் அல்லவா விட்டிருக்கிறான்?'' என்றது நன்றியுடன்.

''அட முட்டாளே! கருணையாவது, கத்தரிக் காயாவது? அவன் உன்னைப் பிடித்துச் சாப்பிடுவதற்காக வல்லவா அதை ஏவி விட்டிருக்கிறான்!'' என்றது தவளை.

''நன்றிகெட்ட தனமாகப் பேசாதே! எப்போதும் நல்லதையே நினை. நல்லது நினைத்தால் நல்லது நடக்கும்; கெட்டது நினைத்தால் கெட்டது நடக்கும்!'' என்றது அது.

''செய் அப்பனே, செய்; உனக்கு எது நல்லதோ அதையே செய்!'' என்றது இது.

அவ்வளவுதான்; துடித்துக் கொண்டிருந்த புழுவை விழுங்கிய மீன் துடித்துக் கொண்டே, ''ஐயோ, ஏமாந் தேனே!'' என்றது பரிதாபமாக.

''நன்றி கெட்ட தனமாகப் பேசாதே! கெட்டதை நினைத்தால் கெட்டது நடக்கும்; நல்லதை நினைத்தால் நல்லது நடக்கும்!'' என்றது தவளை.



## 25. கை பட்ட தோஷம்

வானளாவி நின்ற மரம் ஒன்றைச் சிறு கோடரி யொன்று வெட்டிக்கொண்டிருந்தது.

''ஏண்டா, பொடிப் பயலே! உனக்கு நான்தானே பிடி கொடுத்தேன்? என்னை நீயே வெட்டலாமா? என்று கேட்டது மரம்.

'' நான் என்ன செய்வேன்? மனிதனின் கைதான் என் மேலும் பட்டுவிட்டதே!'' என்றது கோடரி.



## 26. அனுதாபம்

தன்மேல் சாத்தி வைக்கப்பட்டிருந்த ஏணியை இரக்கத்துடன் நோக்கி, ''அனுதாபப்படுகிறேன்; உனக்காக நான் ரொம்ப ரொம்ப அனுதாபப் படுகிறேன்!'' என்றது பரண்.

''எதற்காக அனுதாபப்படுகிறாய், தம்பி?'' என்று கேட்டது இது.

''இதுவரையில் எத்தனையோ பேரை மேலே ஏற்றி விட்டிருக்கும் நீ, இன்னும் கீழேதானே இருக்கிறாய்?'' என்றது இது.

''இதில் அனுதாபப்படுவதற்கு என்ன இருக்கிறது?'' என்றது ஏணி.

''ஏன் இல்லை? பிறருக்குப் பயன்படும் நீ, உனக்குப் பயன்படவில்லையே?'' என்றது பரண்.

ஏணி சொல்லிற்று:

''அட புத்திசாலி! பிறரை மேலே ஏற்றிவிடத்தான் என்னால் முடியும்; நான் நினைத்தாலும் என்னால் மேலே ஏறமுடியாது என்று ஏன் உனக்குத் தெரிய வில்லை?''



## 27. அறியாமை

கட்டிட வேலை முடிந்ததும், அதற்காகக் கட்டப் பட்டிருந்த சாரங்களையெல்லாம் அவிழ்த்துக் கீழே விட்டெறிந்து கொண்டிருந்தார்கள் கொத்தனார்கள்.

''அக்கறை தீர்ந்துவிட்டது; இனி யார் நம்மைக் கவனிக்கப்போகிறார்கள்?'' என்றது ஏணி.

''வருவோர் போவோரெல்லாம்கூட 'ஆஹா! எத்தனை பெரிய மாளிகை, எவ்வளவு அழகான மாளிகை!' என்றுதான் சொல்லப்போகிறார்களே தவிர, அவற்றுக்கெல்லாம் காரணமாயிருந்த நம்மைப்பற்றி யார் ஒரு வார்த்தை சொல்லப் போகிறார்கள்?'' என்றது சாரம்.

கட்டிடம் சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது சாரம்.

''ஒன்றுமில்லை; பிறர் கண்ணில் படாமல் மறைக்கப்பட்டும்கூட அஸ்திவாரம் தன்னைப்பற்றி ஒரு வார்த்தை கூடச் சொல்லிக்கொள்ளாமல் இருக்கிறதே, அதை எண்ணித்தான் சிரிக்கிறேன்!'' என்றது கட்டிடம்.



# 28. இயற்கை

மாலை நேரம்; கையில் கமகமக்கும் ஒரு முழம் கதம்பத்துடன் உள்ளே நுழைந்தான் கணவன்.

அடுத்த கணம், ''பூ ஒன்றுதான் குறைச்சல் எனக்கு!'' என்ற அவன் மனைவியின் ஆத்திரம் மிகுந்த குரலைத் தொடர்ந்து, அந்தப் பூவும் வெளியே படுத்துக் கொண்டிருந்த நாயின்மேல் வந்து விழுந்தது.

திடுக்கிட்டெழுந்த நாய் விஷயத்தை ஒருவாறு புரிந்துகொண்டு, ''இந்தப் பெண்கள் கணவன்மாருடன் சண்டை பிடிப்பதை விடமாட்டார்கள்போல் இருக் கிறது!'' என்று முணுமுணுத்துக்கொண்டே திரும்பிப் பார்த்தது.

அருகே இருந்த மரத்தின்மேல் உட்கார்ந்து அதைக் கேட்டுக் கொண்டிருந்த காகம் சொல்லிற்று:

''நீ 'லொள், லொள்' என்று குரைப்பதை விடுகிறாயா, நான்தான் 'கா கா' என்று கரைவதை விடுகிறேனா, அவர்கள் கணவன்மாருடன் சண்டை பிடிப்பதை விட?''



# 29. தத்துவம்

இரவு வந்ததும் வழக்கம்போல் தன்னுடன் படுத் துறங்க வந்த பனித்துளியை, ''வா, வா!'' என்று வர வேற்றது மூங்கில் இலை.

''நானும் ஒரு நாளைப்போல இரவில் வந்து உன் மேல் படுத்து உறங்குவதும், பொழுது விடிந்ததும் போய்

விடுவதுமாக இருக்கிறேன். ஒரு நாளாவது நீ என்னை, 'நான் எங்கிருந்து வருகிறேன், எங்கே போகிறேன்?' என்று கேட்கவில்லையே, ஏன்?'' என்று கேட்டது பனித்துளி.

மூங்கில் இலை முறுவலுடன் சொல்லிற்று:

''நீ எங்கிருந்து வந்தால் என்ன, எங்கே போனால் என்ன? பகலெல்லாம் வெம்மையின் துன்பத்தை அனுப விக்கும் எனக்கு, இரவின் குளுமையிலே ஒரு சிறிது நேரமே இன்பம் அளிக்க வருகிறாய் நீ! அந்த இன்பத்தையும் எனக்குத் தேவையில்லாத தத்துவ விசாரணையில் இறங்கி நான் ஏன் இழக்க வேண்டும்?''



# 30. முடிவு

நடந்து போய்க்கொண்டிருந்த பாதசாரியின் காலில் 'நறுக்'கென்று தைத்தது ஒரு முள். 'அப்பப்பா!' என்று காலைத் தூக்கி ஆடிக்கொண்டே சென்று, அருகிலிருந்த ஒரு மேடையின்மேல் உட்கார்ந்தார் அவர்.

''பார்த்து வந்திருக்கக்கூடாதா, ஸார்?'' என்றார் வழியே போய்க்கொண்டிருந்த ஒருவர்.

''வந்திருக்கலாம், நான் வருவதற்கு முன்பே நீங்கள் சொல்லியிருந்தால்!'' என்று சொல்லி, அந்த அனுதாபி'யை விறைப்புடன் செல்ல விட்டுவிட்டுக் காலில் தைத்த முள்ளைக் கையால் எடுக்க முயன்றார் அவர்; முடியவில்லை. சுற்று முற்றும் பார்த்தார்; சற்றுத் தூரத்தில் இருந்த இன்னொரு முள் அவருடைய

கவனத்தைக் கவர்ந்தது. எடுத்தார்; எடுத்த முள்ளின் உதவியைக் கொண்டு தைத்த முள்ளையும் எடுத்தார். இரண்டையும் கொண்டுபோய்ப் பக்கத்திலிருந்த சாக் கடையில் போட்டுவிட்டு மேலே நடந்தார்.

அவருடைய தலை மறைந்ததும், ''தைத்தவன் நீ, எடுத்தவன் நான்! ஆனால் உனக்குக் கிடைத்த கதி தானே எனக்கும் கிடைத்திருக்கிறது?'' என்றது எடுத்த முள்.

தைத்த முள் சொல்லிற்று:

''செயலில் வேறுபட்டு இருந்தாலும் இனத்தில் ஒன்றுபட்டல்லவா இருக்கிறோம் நாம்? அதனால்தான் நமக்கு இந்தக் கதி!''



## 31. சுதந்திரம்

கட்டுண்டு கிடந்த நாய் ஒன்று, அந்தக் கட்டிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள ஒரு நாள் ஏக ரகளை செய்துகொண்டிருந்தது.

''அமைதி, அமைதி!'' என்றது, அதற்கு எதிர்த்தாற் போல் கூண்டில் அடைக்கப்பட்டிருந்த கிளி.

''அமைதியாவது, அமைதி! இந்த அடிமை வாழ்வி லிருந்து விடுதலை பெறும்வரை இனி எனக்கு அமைதி என்பதே கிடையாது!'' என்றது நாய்.

''அந்த நாளைத்தான் நானும் ஆவலோடு எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறேன். ஆனால்......''

''ஆனால் என்ன?''

''மூன்றாவது பேர்வழியின் துணையில்லாமல் அது அவ்வளவு எளிதில் முடியாது போலிருக்கிறதே?'' என்றது கிளி.

''அதற்கு யாரைத் தேடுவதாம்?'' என்றது நாய், அவ நம்பிக்கையுடன்.

அப்போது அங்கே வந்த ஒரு குரங்கு, ''நீங்கள் விரும்பினால் உங்களுக்கு நான் உதவத் தயார்!'' என்றது.

''நன்றி; உங்கள் உதவியை நாங்கள் அகமும் முகமும் ஒருங்கே மலர வரவேற்கிறோம்!'' என்றன, நாயும் கிளியும் ஏக காலத்தில்.

அவ்வளவுதான்; அடுத்த நிமிஷமே நாயை அவிழ்த்துவிட்ட குரங்கு, கிளியின் கூண்டையும் திறந்தது.

''விடுதலை, விடுதலை!'' என்று கூவிக்கொண்டே வான வீதியில் சிறகடித்துப் பறந்தது கிளி; ''சுதந்திரம்; சுதந்திரம்!'' என்று ஆனந்தக் கூத்து ஆடிக்கொண்டே, ஊர் முழுவதும் சுற்றிச் சுற்றி வந்தது நாய்.

சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் தன்னால் விடுதலை செய்யப்பட்ட கிளியைச் சந்தித்த குரங்கு, ''எப்படி இருக்கிறது, விடுதலை?'' என்று கேட்டது.

''ஆனந்தம், பரமானந்தம்!'' என்றது கிளி, கன குஷியுடன்.

''மகிழ்ச்சி!'' என்ற குரங்கு, அதனுடன் விடுதலை செய்யப்பட்ட நாயை நோக்கி, ''எப்படி இருக்கிறது, சுதந்திரம்?'' என்று கேட்டது.

''சுத்த மோசம்! காலையில் பால், மத்தியானம் இறைச்சி, மாலையில் பிஸ்கெட், இரவு மறுபடியும் பால்-இதெல்லாம் இந்தச் சுதந்திர வாழ்வில் எங்கே கிடைக்கிறது? ஊர் முழுவதும் சுற்றிச் சுற்றி வந்தாலும்

ஒரு கவளம் எச்சில் சோற்றுக்கு ஓராயிரம் நாய்களுடன் போட்டியல்லவா போட வேண்டியிருக்கிறது?'' என்றது நாய், வெறுப்புடன்.

குரங்கு சொல்லிற்று:

''சுதந்திரத்தில்கூட எல்லோருக்கும் சுகம் கிட்டி விடாதுபோலும்?''



## 32. கடமை

காட்டுக்கு வேட்டையாட வந்திருந்த தன் எஜமானனுக்காகப் புதரில் மறைந்திருந்த ஒரு முயலை 'விரட்டு, விரட்டு' என்று விரட்டிற்று ஒரு நாய்.

ஓடி ஓடிக் களைத்த முயல் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க நின்று, ''அட, இனத் துரோகி! என்னைப்போல் நீயும் ஒரு மிருகம்; உன்னைப்போல் நானும் ஒரு மிருகம். கேவலம், ஒரு சில எலும்புகளுக்காக என்னை நீ இப்படிக் காட்டிக் கொடுக்கலாமா?'' என்று கேட்டது.

''காட்டிக் கொடுத்தால் இனத் துரோகி; காட்டிக் கொடுக்காவிட்டால் எஜமானத் துரோகி. இதில் எது தருமம், எது அதருமம்?' என்று நீதான் சொல்லேன்!'' என்று அதைத் திருப்பிக் கேட்டது நாய்.

முயல் விழிக்க, 'அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். நீங்கள் உங்களுடைய கடமையைச் செய்யுங்கள்: பலனை எதிர்பார்க்காதீர்கள்!'' என்றது ஒரு கழுகு, அங்கிருந்த ஒரு மரக்கிளையில் அமர்ந்தபடி.

''சரி, இப்போது ஓடுவதுதான் என் கடமை!'' என்று சொல்லிக்கொண்டே முயல் ஓடிற்று.

''என் கடமை உன்னைத் துரத்துவதுதான்!'' என்று சொல்லிக்கொண்டே அதைத் துரத்திற்று நாய்.

'டுமீர்' என்று ஒரு சத்தம்; சுருண்டு விழுந்த முயலைப் பாய்ந்து வந்த கழுகு தன் கால்களால் இறுகப் பற்றிக் கொண்டு மேலே பறந்தது.

இதைக் கண்டதும் ஒரு கணம் திடுக்கிட்டு நின்ற நாய், மறுகணம் தன்னைத்தானே சமாளித்துக்கொண்டு சொல்லிற்று:

''இது பலனை எதிர்பாராமல் செய்யும் கழுகின் கடமைபோலும்!''



## 33. கலை

புரவி ஆட்டக்காரன் ஒருவன் பொய்க்கால் குதிரை ஆட்டம் ஆட, அவனைச் சுற்றி ஒரு பெருங்கூட்டம் கூடி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது.

அதைப் பார்த்ததும், ''பொய்க்கால் குதிரை ஆட்டத்துக்கே இவ்வளவு பெரிய கூட்டம் சேர்ந்தால் நிஜக்கால் குதிரை ஆட்டத்துக்கு இன்னும் எவ்வளவு பெரிய கூட்டம் சேரும்!'' என்று நினைத்த ஒரு குதிரை உடனே அந்தக் கூட்டத்துக்குள் உற்சாகத்துடன் புகுந்து, 'தா, தை' என்று ஆட ஆரம்பித்தது.

அவ்வளவுதான்; அந்த நிஜக்கால் குதிரை ஆட்டத்தைக் கண்டதும், சிறியவர்களெல்லாம் அலறி ஓட, பெரியவர்களெல்லாம் கைக்குக் கிடைத்ததைக் கொண்டு அதை நையப் புடைத்து விரட்டினார்கள்.

அடிபட்ட குதிரை ஆற்றாமையுடன் சொல்லிற்று:

" அட கடவுளே! இந்த மனிதர்கள் பொய்யில்தான் கலையழகைக் காண்பார்கள் என்று இதற்கு முன்னால் எனக்குத் தெரியாமற் போச்சே!"



## 34. தியாகம்

ஆற்றங்கரை ஓரத்திலிருந்த ஒரு கல்லின்மேல் தான் கொண்டு வந்திருந்த அழுக்குத் துணிகளை அடித்துத் துவைத்துக் கொண்டிருந்தான் ஒரு சலவைத் தொழிலாளி.

"அழுக்கடைவது துணி; அதை வெளுக்கும்போது அடிபடுவது நீ. ஆஹா, உன் தியாகமே தியாகம்!" என்று கல்லைப் புகழ்ந்தது கழுதை.

"மன்னியுங்கள்; துணி வெளுக்கப்படும்போது நானும் வெளுக்கப்படுகிறேன் என்பதை நீங்கள் மறந்து விட்டீர்கள்!" என்றது கல், உண்மையை மறைக்க விரும்பாமல்.

அசடு வழிந்த கழுதை ஆற்றைப் பார்க்க, அது கல்லைப் பார்த்து முணுமுணுத்தது:

"பிழைக்கத் தெரியாத தியாகி, பிழைக்கத் தெரியாத தியாகி!"



## 35. குறுக்கு வழி

நீண்ட நாட்களாகத் தம்முடைய வாக்காலும் வாழ்வாலும் மக்கள் உள்ளத்தைக் கவர்ந்த ஞானி ஒருவர் தலைவிரி கோலமாகத் தம் வழியே சென்று கொண்டிருந் தார்; அவர் அழைக்காமலே அவரைத் தொடர்ந்து ஒரு பெரிய கூட்டம் சென்று கொண்டிருந்தது.

''எப்போது பார்த்தாலும் இவருக்கு மட்டும் இப்படி ஒரு கூட்டமா?'' என்று பொறாமை கொண்ட ஓர் அஞ்ஞானி, அதற்குக் காரணம் அவருடைய தலைவிரி கோலம்தான் என்று எண்ணி, '' இதோ பார், எனக்கும் நான் ஒரு கூட்டத்தைச் சேர்த்துக்கொள்கிறேன்!'' என்று வாரியிருந்த தலையைக் கலைத்துக்கொண்டு, ''ஆய், ஊய்!'' என்று கத்தினான்.

அவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை; அவனைச் சுற்றியும் உடனே ஒரு கூட்டம் சேர்ந்தது.

ஆனால் என்ன ஏமாற்றம்! அடுத்த கணமே, ''பூ! இவன் ஒரு பைத்தியக்காரண்டா!'' என்று சொல்லிக் கொண்டே அந்தக் கூட்டம் கலைந்தது!



## 36. அபயம்

''எதிலும் சேராத எத்தனையோ பாதகங்கள் இந்த உலகத்தில் தினந்தோறும் நடந்து கொண்டிருக்க, நான் மட்டும் அப்படி என்ன பாதகம் செய்து விட்டேனாம், பஞ்சமா பாதகத்தில் சேர?'' என்றது கள்.

''ஆட்டையும் மாட்டையும் அடித்துத் தின்பவன் கூட அல்லவா பஞ்சமா பாதகத்தில் நானும் சேர்ந்தவன் என்று என்னை இழிவு படுத்துகிறான்!'' என்றது கொலை.

''எல்லாம் அநாகரிகம், அநாகரிகம் என்கிறார்களே, அந்த அநாகரிகத்தால் வந்த வினை! இல்லாவிட்டால் அதற்கு அஞ்சி எத்தனையோ விஷயங்களில் மனிதர் களைத் தடுத்தாட் கொள்ளும் என்னையும் அவர்கள் அந்தப் பஞ்சமா பாதகத்தில் ஒன்றாகச் சேர்ந்திருப் பார்களா?'' என்றது பொய்.

''என்னை மறந்துவிட்டீர்களே?'' என்றது சூது.

''உன்னை மட்டுமா, என்னையும்தான்!'' என்றது களவு.

இந்தச் சமயத்தில், ''அஞ்சற்க!'' என்று யாரோ அபயம் அளிப்பது போலிருக்கவே, ''யார் அந்தப் புண்ணியவான்?'' என்று கேட்டுக்கொண்டே, ஐந்து மகாப் பாதகங்களும் ஏக காலத்தில் திரும்பிப் பார்த்தன.

''இப்போதுதான் எந்தப் பாதகமாயிருந்தாலும் அதை என் பேரால் செய்வது வழக்கமாகிவிட்டதே! உங்களுக்கு ஏன் அந்தக் கவலை? விடுக!'' என்று அவற்றைத் தடுத்தாட் கொண்டது நாகரிகம்!



# 37. கவலை

ஒரு நாள் பார்ப்பதற்கு என்னவோ போலிருந்த பட்ட மரத்தை நோக்கி, ''ஏன் ஒரு மாதிரியா யிருக்கிறாய்? என்ன கவலை, உனக்கு?'' என்று கேட்டது பச்சை மரம்.

''அதை ஏன் கேட்கிறாய், போ! ஒரு காலத்தில் உன்னைப்போல் இருந்தவன்தானே நானும்? இன்று எப்படி ஆகிவிட்டேன், பார்த்தாயா? அதை நினைத்தால் எனக்கு ஒரே கவலையாயிருக்கிறது!'' என்று பட்டமரம் சொல்லிற்று.

இதைக் கேட்ட பச்சை மரம் பெருமூச்சு விட்டது. அதைப் பார்த்த பட்டமரம் கேட்டது:

''நீ ஏன் பெருமூச்சு விடுகிறாய்? உனக்கென்ன கவலை, இப்போது?''

பச்சை மரம் சொல்லிற்று:

''என்றாவது ஒரு நாள் உன்னைப்போல்தானே நானும் ஆகிவிடப் போகிறேன்? அதை நினைத்தால் எனக்கும் ஒரே கவலையாயிருக்கிறது!''



## 38. சமாதானம்

நாலைந்து நாட்களாகத் தெருத் தெருவாகத் திரிந்தும் ஓர் எச்சில் இலைகூடக் கிடைக்கவில்லை ஒரு கிழட்டு நாய்க்கு. அப்படியே கிடைத்தாலும் மற்ற நாய்களுடன் போட்டியிட்டு அதைத் தின்ன முடியவில்லை அதனால். ஆகவே பசி ஒரு பக்கமும், வயோதிகத்தால் ஏற்பட்ட வாட்டம் இன்னொரு பக்கமு மாக அது ஒரு நாள் வீதி வழியே தளர் நடை நடந்து சென்றுகொண்டிருந்தது.

அப்போது அதற்கு முன்னால் ஓர் எச்சில் இலை வந்து விழ, அதற்காக அந்தக் கிழட்டு நாயை முந்திக் கொண்டு ஏழெட்டு நாய்கள் ஓடி வந்து சண்டையிட, ''நில்லுங்கள் சகோதரர்களே, நில்லுங்கள்! கேவலம் ஓர்

எச்சில் இலைக்காக ஒரே இனத்தைச் சேர்ந்த நாம் இப்படியா சண்டையிட்டுக் கொள்வது? வெட்கம்! வெட்கம்!'' என்றது அது வேதனையுடன்.

அதைக் கேட்டு மற்ற நாய்கள் வெட்கத்தால் தலை குனிந்து நிற்க, அதுதான் சமயமென்று கிழட்டு நாய் அந்த எச்சில் இலையைக் காலி செய்துவிட்டு, ''வாழ்க, சமாதானம்!'' என்றது, சற்றே வாட்டம் தணிந்து.

அதுவரை அதைக் கவனித்துக்கொண்டிருந்த மற்ற நாய்களில் ஒன்று பெருமூச்சுடன் சொல்லிற்று:

''சமாதானத்துக்கு எப்போது வாழ்த்துக் கூற வேண்டுமென்று இப்போதல்லவா தெரிகிறது, எனக்கு!''



# 39. வீரம்

'லொடுக்கிட்டி, லொடுக்கிட்டி' என்று ஆடி அசைந்து சென்றுகொண்டிருந்தது ஒரு மாட்டு வண்டி.

அந்த வண்டிக்குப் பின்னால் கன வேகமாக வந்து கொண்டிருந்த ஒரு கார், ''ஏய், சனியனே! ஒதுங்கிப் போ!'' என்று அதை மிரட்டி விரட்டிற்று.

''மரியாதைக் குறைவாகப் பேசாதே! என்ன இருந்தாலும் உனக்கு நான் மூத்தவன் என்பதை மறந்து விடாதே!'' என்றது மாட்டு வண்டி.

''மூத்தவனாவது, கீத்தவனாவது! யாராயிருந்தாலும் என்னைக் கண்டதும் ஒதுங்கி வழி விட்டால்தான் ஆச்சு; இல்லாவிட்டால் அவர்களை நான் மோதி மிதித்து விடுவேனாக்கும்!'' என்று கார் உறுமிற்று.

''ஐயோ, வேண்டாம் அப்பனே! இதோ நான் ஒதுங்கி விடுகிறேன்; நீ போ, கன ஜோராகப் போ!'' என்று ஒதுங்கி வழி விட்டுவிட்டது மாட்டு வண்டி.

அது சொன்னபடியே கன ஜோராகப் போன காரை 'எங்கே, என்னை மோதி மிதித்துவிடு பார்ப்போம்?' என்பதுபோல் ஒரு ரயில்வே கேட் தடுத்து நிறுத்தியது.

வேறு வழியில்லாமல் நின்ற காரை நெருங்கி, ''அந்த ரயில் மட்டும் உன்னைக் கண்டதும் ஏன் அப்பா ஒதுங்கி வழி விடவில்லை?'' என்று மாட்டு வண்டி கேட்டது.

கார் வாயைத் திறக்கவில்லை!



# 40. இருளும் ஒளியும்

''இருளே, இருளே! நான் வரும்போது நீ எங்கே போகிறாய்? நான் போனபின் நீ எங்கிருந்து வருகிறாய்?'' என்று ஒரு நாள் இருளைக் கேட்டது ஒளி.

இருள் சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது ஒளி.

''எப்போதும் இருக்கும் என்னைப் பார்த்து வருவதும் போவதுமாயிருக்கும் நீ இப்படிக் கேட்டால், நான் சிரிக்காமல் அழவா செய்வேன்?'' என்றது இருள்.

இதைக் கேட்ட ஒளி தனக்குத் தானே முணுமுணுத்துக் கொண்டது:

''எல்லாம் வெறும் பிரமை, எல்லாம் வெறும் பிரமை!''



## 41. பெண்ணின் பெருமை

*"ரங்கா, ரங்கா, ரங்கா......!"*

*"ரங்கா, ரங்கா, ரங்கா!"*

*"அக்கா, அக்கா, அக்கா......!"*

*"அக்கா, அக்கா, அக்கா!"*

*"திருடன், திருடன், திருடன்......!"*

*"திருடன், திருடன், திருடன்!"*

*"அதோ வரான், அதோ வரான், அதோ வரான்......!"*

*"அதோ வரான், அதோ வரான், அதோ வரான்!"*

*சொன்னது சொன்னபடி தான் வளர்க்கும் கிளிப்பிள்ளை சொன்னதில் பர திருப்தியடைந்த எஜமானி, "அடி என் கண்ணு!" என்று அதைத் தொட்டு முத்தி விட்டு உள்ளே சென்றாள்.*

*அவள் தலை மறைந்ததும் கிளிப்பிள்ளை சொல்லிற்று:*

*"அடாடா! என்ன சந்தோஷம், என்ன சந்தோஷம்! தன் சொந்த புத்திக்கு வேலை கொடுக்காதவர் யாராயிருந்தாலும் இந்தப் பெண்களுக்கு ரொம்ப ரொம்பப் பிடிக்கும் போலிருக்கிறது!"*



## 42. பகைமை

*"கடவுளே, கடவுளே! தற்காப்புக்காக மாட்டுக்குக் கொம்பைக் கொடுத்த நீ, மனிதனுக்கு மட்டும் அதை ஏன் கொடுக்கவில்லை?" என்றான் பக்தன்.*

கடவுள் சொன்னார்:

''மாட்டுக்குப் பகைவர்களைச் சிருஷ்டித்தவன் நான்; ஆகவே அவற்றினிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்காக அதற்கு நான் கொம்பைக் கொடுத்தேன். மனிதனுக்கு நான் எங்கே பகைவர்களைச் சிருஷ் டித்தேன், அவனுக்குக் கொம்பைக் கொடுக்க? அவனுக் குள்ள பகைவர்களெல்லாம் அவனுக்கு அவனாகவே சிருஷ்டித்துக் கொண்டவர்களல்லவா?''



# 43. நன்றி!

**வ**சந்தம் வந்தது.

ஆற்றங்கரையிலிருந்த ஆலமரம் துளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுத்துக் கனிந்தது.

பறவையினங்கள் அனைத்தும் 'கா, கூ, கீ' என்று குரல் கொடுத்துக்கொண்டே வந்து அதில் குடியேறின; பசியாற உண்டு, களித்து, உறங்கி விழித்தன.

வசந்தம் சென்றது.

ஆலமரத்தில் துளிர் இல்லை, பூ இல்லை, காய் இல்லை, கனியும் இல்லை!

பறவைகள் பார்த்தன; பசிக்கு இரை தேடிப் பறந்தன.

அருகிலிருந்த அரசமரம், ''என்ன நன்றி கெட்ட பறவைகள் அவைகள்! எல்லாம் இருக்கும் வரைதான் அவற்றின் உறவுபோலும்?'' என்றது ஆலமரத்தினிடம்.

ஆலமரம் சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது அரசமரம்.

ஆலமரம் சொல்லிற்று:

''உனக்கும் எனக்கும் உள்ள இடத்திலேயே உணவு கிடைப்பதுபோல் அவற்றுக்கும் கிடைத்தால், அவையும் நன்றியுள்ள ஜீவன்களாய்த்தான் இருக்கும்!''



## 44. ஆஹா, மனிதன்!

''சின்ன மீனைப் பெரிய மீன் விழுங்கி வாழ்வதும், பெரிய மீனை அதற்கும் பெரிய மீன் விழுங்கி வாழ்வதும்...... சீசீ! இப்படித் தன் இனத்தைத் தானே உண்டு வாழும் ஈன ஜன்மம் இந்த உலகத்தில் வேறு ஒன்றும் கிடையாது!'' என்றது ஒரு நாள் ஒரு மீன், தன்னைத்தானே நொந்துகொண்டு.

''ஏன், மனிதன் இல்லையா?'' என்றது இன்னொரு மீன்.

''அவன் எங்கே தன்னைத் தானே சாப்பிடுகிறான்?'' என்றது அது.

''ஏன் சாப்பிடவில்லை? நாம் தெரிந்து சாப்பிட்டால், அவன் தெரியாமலே சாப்பிட்டு விடுகிறான்!'' என்றது இது!



## 45. அன்பு

அருகிலிருந்த ஒரு கொழுகொம்பைப் பற்றிப் படர்ந்தது ஒரு கொடி.

''ஆஹா! உனக்கு என்மேல் என்ன அன்பு, என்ன அன்பு! அப்படியே இறுகத் தழுவிக்கொண்டு விட்டாயே?'' என்றது கொம்பு.

''அட, பாவமே! இப்படித்தான் ஏமாந்து விடுகிறார்கள் சிலர்!'' என்றது கொடி அனுதாபத்துடன்.

''அது எப்படி?'' என்று கேட்டது கொம்பு, ஒன்றும் புரியாமல்.

''அவர்களுக்கும் உனக்குத் தெரியாததுபோல்தான் அன்புக்கும் சுயநலத்துக்கும் உள்ள வித்தியாசம் தெரிவதில்லை!'' என்றது கொடி.



## 46. உபதேசம்

ஓர் ஊரில் இரண்டு நண்பர்கள் இருந்தார்கள். ஒருவன் பெயர் கொடாக்கண்டன்; இன்னொருவன் விடாக்கண்டன்.

ஒருநாள் மழை 'சோ' வென்று பெய்து கொண்டிருந்தது. விடாக்கண்டன் கொடாக்கண்டனை நோக்கி, ''கடைத் தெருவரை அவசரமாகப் போகவேண்டியிருக்கிறது; உன்னுடைய குடையைக் கொஞ்சம் இரவல் தருகிறாயா?'' என்று கேட்டான்.

''நண்பா, வேறு யாராவது இப்படிக் கேட்டிருந்தால் அவர்கள் எக்கேடாவது கெட்டுப் போகட்டும் என்று

நான் குடையைக் கொடுத்திருப்பேன். ஆனால் உனக்குக் கொடுக்க எனக்கு விருப்பமில்லை. ஏனெனில், உன்னுடைய கால்களைக் கொண்டே நீ நிற்கப் பழக வேண்டுமென்பது என் விருப்பம். என்ன இருந்தாலும் நீ என் ஆருயிர் நண்பனல்லவா? இன்று நான் உனக்குக் குடை கொடுப்பதாக வைத்துக்கொள்; இரவல் குடை யிலேயே காலந்தள்ளி விடலாம் என்ற தவறான எண்ணத்துக்கு நீ ஆளாகிவிடுவாய். அதனால் உன் கால் களின் மீதே உனக்கு நம்பிக்கை இல்லாமற் போய்விடும். அந்த நிலைக்கு உன்னைக் கொண்டுவரவா உனக்கு நான் நண்பனானேன்?-வேண்டாம் நண்பா, இன்று நீ மழையில் நனைந்தே போ! அப்போது உனக்கென்று ஒரு குடை உனக்குச் சொந்தமாயிருக்க வேண்டியதின் அவசி யத்தை நீ உணர்வாய்!'' என்றான் கொடாக்கண்டன்.

விடாக்கண்டன் போய்விட்டான்.

இன்னொரு நாள் அவர்கள் இருவரும் அந்த ஊர் தபாலாபீஸில் சந்தித்தார்கள். ''ஒரு நிமிஷம் உன்னுடைய பேனாவைக் கொடு; மேல் விலாசத்தை எழுதி விட்டுத் தருகிறேன்!'' என்றான் விடாக்கண்டன்.

''முடியாது நண்பா, முடியாது. இன்றைக்குக் கொடுத்தால் நீ நாளைக்கும் கேட்பாய்; நாளை மறு நாளும் கேட்பாய்!-இப்படியே உன் வாழ்நாள் முழுவதும் கேட்டுக்கொண்டே இருப்பாய்!'' என்று வழக்கம்போல் தன் 'உபதேச'த்தை ஆரம்பித்தான் கொடாக்கண்டன்.

''இல்லை நண்பா, இந்தத் தடவைமட்டும் கொடு; இனிமேல் உன்னைக் கேட்கவில்லை......''

''என்னைக் கேட்காவிட்டால் இன்னொருவனைக் கேட்பாய்!-ஐயோ, எடுத்தற்கெல்லாம் நீ பிறரிடம் பல்லைக்காட்டிக் கெஞ்ச வேண்டுமா? அருவருக்கத்

தக்க அந்த காட்சியை நான் பார்க்கவேண்டுமா?- மாட்டேன்; உன்னுடைய கால்களைக் கொண்டு நீ நிற்கப் பழகும் வரை நான் உனக்கு ஒன்றுமே கொடுக்க மாட்டேன்!'' என்று ஒரேடியாக மறுத்துவிட்டான் கொடாக்கண்டன்.

இப்படியே விடாக்கண்டன் எதைக் கேட்டாலும் கொடாக்கண்டன் அவனுக்கு மேற்கூறிய உபதேசத் தையே செய்து வந்தான்.

ஒரு நாள் இருவரும் ஏதோ காரியமாக அடுத்த ஊருக்குச் சென்றார்கள். வழியில் இருட்டி விட்டது. அந்த இருட்டில் அவர்கள் ஒரு மூங்கிற் பாலத்தைக் கடக்க வேண்டியிருந்தது. விடாக்கண்டன் முன்னால் நடந்தான்; கொடாக்கண்டன் அவனுக்குப் பின்னால் நடந்தான். பாலத்தைக் கடக்கப் போகும் சமயம்-'மளமள'வென்று மூங்கில் முறியும் சத்தம் கேட்டது. விடாக்கண்டன் பயந்துபோய் ஒரே தாவாகத் தாவி அடுத்த கரையை அடைந்தான். அதே சமயத்தில் ''ஐயையோ!'' என்று அலறிக்கொண்டே ஆற்றில் விழுந்தான் கொடாக்கண்டன். அடுத்த கணம், ''நண்பா! என்னைக் கரையேற்று, என்னைக் கரையேற்று!'' என்று அவன் தீனக் குரலில் கதறினான்.

''என் அருமை நண்பா! வேறு யாராவது விழுந்திருந்தால் அவர்கள் எக்கேடாவது கெட்டுப் போகட்டும் என்று நான் அவர்களைக் காப்பாற்றி யிருப்பேன். ஆனால் உன்னைக் காப்பாற்ற எனக்கு விருப்பமில்லை. என்ன இருந்தாலும் நீ என்னுடைய நண்பனல்லவா? உன்னுடைய கால்களைக் கொண்டே நீ நிற்கப் பழக வேண்டுமென்பது என் விருப்பம். ஆகவே, நீந்து!நீந்து! நீந்திக் கரையேறு!'' என்றான் விடாக் கண்டன்.

''ஐயோ, எனக்கு நீந்தத் தெரியாதே!'' என்றான் கொடாக்கண்டன்.

''அப்படியானால் நீந்தத் தெரிந்துகொள்ள வேண்டியதன் அவசியத்தை நீ உணர வேண்டாமா? அதற்கு என்னாலான உதவியை இதோ செய்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு, விடாக்கண்டன் அவனைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் நடையைக் கட்டினான்.



## 47. இனப்பற்று

பொழுது விடியப்போகும் சமயம், முன் இரவில் தங்களுக்காக இரை தேடச் சென்ற தாய்புலியை எதிர் பார்த்து இரு குட்டிப் புலிகள் காத்திருந்தன. முன் கால்கள் இரண்டையும் நீட்டிச் சோம்பல் முறித்துக் கொண்டே, ''இவ்வளவு நேரமாகியும் அம்மாவைக் காணோமே?'' என்றது ஒரு புலிக்குட்டி.

''இன்னும் ஒன்றும் கிடைக்கவில்லையோ, என்னமோ?'' என்றது இன்னொரு புலிக்குட்டி, நாக்கைச் சப்பு கொட்டிக்கொண்டே.

''எனக்குப் பசி காதை அடைக்கிறது.......''

''எனக்கும்தான் பசி வயிற்றைக் கிள்ளுகிறது!''

''எதற்கும் நாம் கொஞ்ச தூரம் சென்று அம்மாவைத் தேடிப் பார்ப்போமா?''

''வேண்டாம், வேண்டாம். 'நான் வரும் வரை நீங்கள் குகையை விட்டு வெளியே வரக்கூடாது' என்று அம்மா சொல்லிவிட்டுப் போயிருக்கிறாள்!''

''கடைசி வரை அம்மா வராமலே இருந்து விட்டால்......?''

''என்னை நீயும் உன்னை நானும் சாப்பிட்டு விடுவதா, என்ன?-பேசாமல் இரு; அப்படி வரா விட்டால் அப்புறம் பார்த்துக் கொள்வோம்!'' என்று அவற்றில் ஒன்று எரிந்து விழுந்தது.

இன்னொன்று, ''அதுவரை பசியோடு இங்கேயே கிடந்து தவிக்க வேண்டுமாக்கும்!'' என்று அலுத்துக் கொண்டே, தன் கால் விரல்களில் ஒன்றை லேசாகக் கடித்து, அதில் கசிந்து வந்த ரத்தத்தை நக்கி ருசி பார்த்தது.

அதற்குள் அவற்றின் அம்மா சற்றுத் தூரத்தில் உறுமிக்கொண்டு வரும் சத்தம் கேட்கவே, இரண்டு குட்டிகளும் ஏக காலத்தில் துள்ளிக் குதித்து அதை வரவேற்கத் தயாராயின.

தாய்ப்புலி தங்களை நெருங்கியதுதான் தாமதம்; குட்டிப் புலிகள் இரண்டும் ஏமாற்றம் அடைந்தன. ஏனெனில், அவை எதிர்பார்த்ததுபோல் அம்மாவின் வாயில் எந்த விதமான இரையும் இல்லை.

''ஏன் அம்மா, ஒன்றும் கிடைக்கவில்லையா?''

''கிடைத்தது; அதற்குள் இன்னொரு புலி வந்து......''

''என்ன கிடைத்தது?''

''ஒரு கொழுத்த காட்டுப் பன்றி. தன்பாட்டுக்கு அது ஒரு மரத்தடியில் உதிர்ந்து கிடந்த பழங்களைப் பொறுக்கித் தின்றுகொண்டிருந்தது. நான் அதன் மேல் பாயத் தயாராவதற்குள் இன்னொரு புலி வந்து அதைக் கவ்விக்கொண்டு போய்விட்டது......''

''அதை நீ சும்மாவா விட்டாய்?''

''சும்மா விடாமல் என்ன செய்வதாம்?''

''நீ அதை ஏன் அடித்துக் கொன்றிருக்ககூடாது?''

''சீசீ, நாம்கூட மனிதர்களா என்ன?-தன் இனத்தைத் தானே அடித்துக் கொல்ல?- நாம் மிருகங்கள்;- அப்படி யிருக்கும்போது நமக்கு நாமே எதிரிகளாக முடியுமா?- அந்தப் பன்றி போனால் இன்னொரு பன்றி!'' என்று சொல்லிக்கொண்டே, தாய்ப்புலி மீண்டும் இரை தேடச் சென்றது.

''குட்டிப் புலிகள் இரண்டும் தங்கள் பசியை மறந்து, ''நாம் மிருகங்கள்: மனிதர்களைவிட உயர்ந்த மிருகங்கள்!'' என்று கும்மாளம் கொட்டின.



## 48. வித்தியாசம்

ஊருக்கு நடுவே ஓர் அழகான பங்களா. அந்தப் பங்களாவில் சமையற்காரனையும் தோட்டக்காரனையும் தவிர வேறு யாரும் இல்லை. பங்களாவுக்குச் சொந்தக் காரனான ஒரு சுந்தர புருஷன் மாடி முகப்பில் அப்படியும் இப்படியுமாக உலாவிக் கொண்டிருந்தான்.

அன்று பௌர்ணமி; வெண்ணிலவு தண்ணொளியை வீசிக்கொண்டிருந்தது.

'ஆஹா அவள் மட்டும் இன்று நம் பக்கத்தில் இருந் திருந்தால்? இந்த வெண்ணிலவு இப்படி வீணாய்ப் போகுமா?''

சுந்தர புருஷனின் சிந்தனை சுழன்றது. 'கலகல' வென்ற சிரிப்பின் ஒலியும் எங்கிருந்தோ வந்து அவன் காதில் விழுந்தன. சுற்றுமுற்றும் பார்த்தான். யாரையும் காணவில்லை-எல்லாம் வெறுங் கற்பனை !

'அவள் இருந்திருந்தால் இந்நேரம் பழமும் கையுமாக வந்து நின்றிருப்பாள்; அப்புறம் வெற்றிலையும் கையுமாக நின்றிருப்பாள்.

......அவளை நான் அருகில் உட்கார வைத்துக் கொண்டிருப்பேன்; பேச்சு ஸ்வாரஸ்யமாக ஆரம்பமாகியிருக்கும்.

......அதற்குள் அவளுடைய கன்னங்கரேலென்ற கூந்தலை அலங்கரிக்கும் வெள்ளை வெளேரென்ற மல்லிகைப்பூவின் நறுமணம் காற்றோடு கலந்து வந்து என் மூக்கை துளைத்திருக்கும்; கைகள் ஒன்றையொன்று வருடியிருக்கும். அவ்வளவுதான்; பேச்சு நின்றே போயிருக்கும்......

......இருவரும் ஒருவரையொருவர் விழுங்கி விடுவதைப்போல் ஒரு கணம் பார்த்திருப்போம். பிறகு, பிறகு, பிறகு.....பேசாமல் இறங்கிக் கீழே போயிருப்போம்.!'

இந்த இடத்தில் ஏனோ தெரியவில்லை; சுந்தர புருஷன் தனக்குத் தானே சிரித்துக்கொண்டான்.

மீண்டும் அவனுடைய சிந்தனை சுழன்றது:

'சீ, இதெல்லாம் என்ன நினைப்பு-நமக்கு ஏதாவது மூளைக்கோளாறா, என்ன?-இல்லை, இல்லை; எல்லாம் இந்த வெண்ணிலவின் கோளாறுதான்!'

இந்தத் தீர்மானத்துக்கு வந்ததும் அவன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். பிறகு, மறுபடியும் உலாவ ஆரம்பித்தான். அன்றிரவு அவனுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை.

**சு**ந்தர புருஷனின் பங்களாவுக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு குடியானவன் பழைய கயிற்றுக் கட்டிலில் விரிந்து பரந்து கிடந்த நீல வானத்தை இமை கொட்டாமல்

பார்த்துக் கொண்டிருந்தான். அவனைப் பார்த்ததும் சுந்தர புருஷனுக்குச் சிரிப்பு பொத்துக்கொண்டு வந்தது.

'பாவம், ஏழைக் குடியானவனான அவனுக்கும் இன்றிரவு தூக்கம் பிடிக்கவில்லை போலும்! இந்தப் பாழும் வெண்ணிலவு யாரைத்தான் சும்மாவிடுகிறது? நம் மனைவிதான் ஊருக்குப் போயிருக்கிறாள்; அவன் மனைவியும் ஊருக்குப் போயிருக்கிறாளோ;-ஆமாம்; அவனுக்கும் நமக்கும் வேறு எத்தனையோ விஷயங் களில் வித்தியாசம் இருக்கலாம். ஆனால் இந்த ஒரு விஷயத்தில் மட்டும் ஈ, எறும்பு முதல் எண்ணாயிரம் ஜீவராசிகளும் ஒன்றே!'

இப்படி நினைத்தானோ இல்லையோ, சுந்தர புருஷன் 'தடதட'வென்று மாடியை விட்டுக் கீழே இறங் கினான். நேரே அந்தக் குடியானவனிடம் சென்றான். உண்மையைத் தெரிந்து கொள்ளும் ஆவலுடனும், உள்ளத்தில் பொங்கிவரும் உவகை யுடனும், "நீ ஏன் இன்னும் தூங்கவில்லை? உன்னையும் இந்தப் பால் நிலவு பாடாய்ப் படுத்துகிறதா?" என்று கேட்டான்.

"அதெல்லாம் ஒண்ணும் இல்லீங்க; தூக்கம் வரலீங்க!" என்றான் அவன் கொட்டாவி விட்டுக் கொண்டே.

"ஏன் உன்னுடைய மனைவியும் ஊருக்குப் போயிருக்கிறாளா?"

இதைக் கேட்டதும் அந்த குடியானவன் அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, மறுகணம் விழுந்து விழுந்து சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறாய்? உன்னுடைய மனைவி ஊருக்குப் போன விஷயம் எனக்கு எப்படித் தெரிந்தது என்று நினைத்தா சிரிக்கிறாய்?-இதில் என்ன ஆச்சரியம்

இருக்கிறது? - எங்கேயாவது பாம்பின் கால் பாம்புக்குத் தெரியாமல் போய்விடுமா?'' என்றான் சுந்தரபுருஷனும் சிரித்துக்கொண்டே.

அவனுடைய சிரிப்பைப் பொருட்படுத்தாமல் குடியானவன் 'சட்'டென்று குடிசைக்குள் நுழைந்தான்; கையில் ஒரு காலிப்பானையுடன் 'விடுவிடு'வென்று வெளியே வந்தான்.

'என்ன இது!'' என்று திடுக்கிட்டுக் கேட்டான் சுந்தரபுருஷன்.

''இந்தப் பானையிலே சோறிருந்தா, எந்த நெலவு என்னை என்ன பண்ணுங்க? இந்நேரம் நல்லா தூங்கிப் போயிருக்க மாட்டேனுங்களா?'' எனறான் அவன் அடி வயிற்றைத் தடவிக்கொண்டே.



## 49. அனுதாபம்

**ம**னத்தை மயக்கும் மாலை நேரம். நவநாகரிகமாக உடை அணிந்திருந்த ஒருவன் தன்னையும், தன் அழகையும் கண்டு எத்தனை நாரீமணிகள் பெருமூச்சு விடுகிறார்கள் என்று வழி நெடுக உயர்ந்து நிற்கும் மாட மாளிகைகளைக் கவனித்துக்கொண்டே சென்றான். அந்தப் பொல்லாத நாரீமணிகளோ அனைக் கண்டு தாங்கள் பெருமூச்சு விடுவதற்குப் பதிலாகத் தங்களைக் கண்டு அவனையே பெருமூச்சு விடச் செய்தார்கள்!

இந்த லட்சணத்தில் வழியில் கிடந்த ஒரு வாழைப் பழத் தோலை அவன் கவனிக்கவில்லை; அதன் மேல் காலை வைத்துவிட்டான்.

அவ்வளவுதான்; 'சரேல்' என்று சறுக்கிற்று; 'தொபு கடீர்' என்று கீழே விழுந்தான்.

அடுத்த நிமிடம் அவனைச் சுற்றி ஒரு சிறு கூட்டம் கூடிவிட்டது.

''த்சோ, த்சோ! பார்த்து வந்திருக்கக் கூடாதா, சார்?'' என்றார் ஒருவர்.

''ஏதாவது அடி, கிடி பட்டுவிட்டதோ?'' என்றார் இன்னொருவர்.

கீழே விழுந்தவனுக்கு அவர்களுடைய அனுதாபம் அந்தச் சமயத்தில் ஆறுதல் அளிக்கக்கூடியதாயில்லை. அதற்குப் பதிலாக அது அவமானத்தையே அளிப்பதாயிருந்தது. எனவே, 'சட்'டென்று அவன் விழுந்த சுவடு தெரியாமல் எழுந்து மேலே நடந்தான். 'இன்னும் கொஞ்ச நேரம் தாமதித்தால் இவர்கள் நம் பல்லையே பிடித்து ஆட்டிப் பார்த்தாலும் பார்த்து விடுவார்கள் போலிருக்கிறதே!-நல்ல ஜனங்கள், நல்ல அனுதாபம்!' என்று அவனுடைய வாய் முணுமுணுத்தது. அடுத்த கணம் அவனைச் சுற்றிக் கூடியிருந்த கூட்டம் ஒரு 'வந்தன'த்துக்குக்கூட வழியில்லாமல் கலைந்தது.

அவர்கள் அனைவரும் போன பிறகு வாழைப்பழத் தோல் தனக்குத் தானே சொல்லிக்கொண்டது:

''நசுக்கியவனுக்காகத்தான் எல்லாரும் அனுதாபப் படுகிறார்களே தவிர, நசுக்கப்பட்டவனுக்காக ஒருவர் கூட அனுதாபப்படவில்லையே!''



## 50. கடமை

முதல் நாள் மாலை அழகுச் சாதனங்கள் அடங்கிய அழகான பெட்டியொன்றை வாங்கிக்கொண்டு வந்து காதலியின் கையில் கொடுத்தான் காதலன்.

அவள் புன்னகை பூத்தாள்; அந்தப் புன்னகையிலே அவன் தன் கவலைகளையெல்லாம் மறந்தான்.

மறுநாள் பட்சணங்கள் நிறைந்த பொட்டணமொன்றைப் பையில் வாங்கிப் போட்டுக்கொண்டு வந்து அவள் கையில் கொடுத்தான் அவன்.

அவள் புன்னகை பூத்தாள்; அந்தப் புன்னகையிலே அவன் தன் கவலைகளையெல்லாம் மறந்தான்.

அடுத்த நாள் அவன் வரும்போதே, ''இன்று என்ன வாங்கிக்கொண்டு வந்திருக்கிறீர்கள்?'' என்று நீண்ட சடை ஆட, காதில் அணிந்திருந்த குண்டலங்கள் ஆட, அவள் ஓடோடியும் வந்து கேட்டாள்.

''ஆப்பிள்! அதன் வண்ணத்தோடு இன்று உன்னுடைய கன்னத்தின் வண்ணத்தை ஒப்பிட்டுப் பார்க்கப் போகிறேன்!'' என்றான் அவன்.

அவள் புன்னகை பூத்தாள்; அந்தப் புன்னகையிலே அவன் தன் கவலைகளையெல்லாம் மறந்தான்.

அதற்கடுத்த நாள், ''இன்று...?'' என்று கொஞ்சலோடு கேட்டுவிட்டு அவள் நிறுத்தினாள்.

''ரோஜாப் பூ!'' என்றான் அவன்.

அவள் புன்னகை பூத்தாள்; அந்தப் புன்னகையிலே அவன் தன் கவலைகளையெல்லாம் மறந்தான்.

*அதற்கும் அடுத்த நாள். ''இன்று என்ன வாங்கிக் கொண்டு வந்திருக்கிறீர்கள்?-எங்கே காட்டுங்கள், பார்க் கலாம்?'' என்று செவ்விதழ்கள் விரிய, வெண் பற்கள் தெரிய ஆவலுடன் கேட்டுக்கொண்டே வந்து அவனுக்கு அருகே நின்றாள் அவள்.*

*அன்று அவனிடம் காசில்லை; ஆகவே கையை விரித்தான்.*

*அவ்வளவுதான்; அவளுடைய வெண் பற்களைச் செவ்விதழ்கள் மூடின. அன்று ஏனோ அவள் புன்னகை பூக்கவில்லை!*

*இதனால் தன் கவலைகளை மறப்பதற்காக அவன் தோட்டத்துப் பக்கம் சென்றான்; அங்கிருந்த ஒரு முல்லை மலரை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டே ஏதோ யோசித்தபடி நின்றான்.*

*''நானும் ஒரு மலர்தானே? என்னைப் பார்ப்பதற்குப் பதிலாக அந்த மலரை ஏன் பார்க்க வேண்டும்?'' என்றாள் அவள்.*

*அவன் சொன்னான்:*

*''என்னிடமிருந்து எதையும் எதிர்பாராமலே இந்த மலர் என்னைக் கண்டு புன்னகை பூக்கிறது!''*

*அவள் சொன்னாள்:*

*''மழையை எதிர்பார்க்காமல் அந்த மலரும் யாரைக் கண்டும் புன்னகை பூப்பதில்லை!''*



# 51. பயம்

வானுலகிலே எமதர்ம ராஜனின் தர்பார் நடந்து கொண்டிருந்தது. எம கிங்கரர்கள் பூலோகத்திலிருந்து பிடித்துக்கொண்டு வந்திருந்த ஜீவராசிகளை ஒவ்வொன்றாக அவனுக்கு அறிமுகப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தனர். அவரவர்கள் செய்த குற்றத்துக்குத் தக்கபடி அவன் தண்டனை விதித்துக்கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் எந்த விதமான முன்னறிவிப்புமின்றி இரண்டு ஜீவன்கள் வியர்க்க விறுவிறுக்க ஓடி வந்து எமனுக்கு முன்னால் நின்றன.

அவற்றில் ஒன்று மனிதன்; இன்னொன்று பாம்பு.

''சமய சந்தர்ப்பம் தெரியாமல் இவர்களை எனக்கு முன்னால் திடீரென்று கொண்டுவந்து நிறுத்தியவர்கள் யார்?'' என்று பொங்கி வந்த கோபத்தில் துள்ளி எழுந்து கேட்டான் எமன்.

கிங்கரர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பீதியுடன் பார்த்துக்கொண்டனர். ஏனெனில், அந்த ஜீவன்களைப் பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது!

''உங்களில் யாரும் இவர்களை அழைத்துக் கொண்டு வரவில்லையா?'' என்று உறுமினான் எமன்.

''இல்லை, அரசே!'' என்று கிங்கரர்கள் கையை விரித் தனர்.

அடுத்த கணம் எமனின் பார்வை சித்திர குப்தனின் பக்கம் திரும்பியது; அவன் ஆசனத்தை விட்டு எழுந்து நின்றான்.

''உமக்கு இவர்களைப்பற்றி ஏதாவது தெரியுமா? நீர்தான் இவர்களை அழைத்துக் கொண்டு வரச் சொன்னீரா?'' என்று எமன் சித்திரகுப்தனை நோக்கிக் கேட்டான்.

''இல்லை; நான் இவர்களை அழைத்துக் கொண்டு வரச் சொல்லவில்லை!'' என்றான் சித்திரகுப்தன்.

''சரி; இவர்களுடைய ஆயுசு முடிந்துவிட்டதா என்று உம்முடைய கணக்குப் புத்தகத்தைப் புரட்டிப்பாரும்!'' என்று எமன் கட்டளையிட்டான்.

சித்திரகுப்தன் முணுமுணுத்துக் கொண்டே, இப்படியும் அப்படியுமாகச் சிறிது நேரம் புத்தகத்தைப் புரட்டினான். பிறகு, ''இல்லை; இவர்களுடைய ஆயுசு இன்னும் முடியவில்லை!'' என்றான்.

மறுகணம் எமதர்ம ராஜனின் பார்வை அந்த மனிதனின் மீதும் அந்தப் பாம்பின் மீதும் விழுந்தது.

''இது என்ன, ஆச்சரியமாயிருக்கிறதே! நீங்களாகவே என்னைத் தேடி வந்துவிட்டீர்களா, என்ன?'' என்று அவர்களை நோக்கிக் கேட்டான்.

''ஆம், எமப் பிரபுவே!'' என்று சொல்லிவிட்டு இரண்டு ஜீவன்களும் தலைகுனிந்தன.

''அப்படியானால் நீங்கள் இங்கே வருவதற்கு முன்னால் செத்திருக்க வேண்டுமே!-யார் உங்களைச் சாக அடித்தது?''

''எங்களை நாங்களே சாக அடித்துக் கொண்டோம்!''

''வேடிக்கைதான்; இந்த விபரீதம் எப்படி நிகழ்ந்தது?''

''ஒரு நாள் இரவு கையில் லாந்தர் விளக்குடன் நான் வயல் வெளிக்குச் சென்று கொண்டிருந்தேன்; வரப்பின் மேல் கிடந்த பழுதையைப் பாம்பென்று எண்ணிப் பயந்து போய் அலறிக் குதித்தேன் அப்படிக் குதித்த இடத்தில் நிஜமாகவே இந்தப்பாம்பு இருந்து என்னைக் கடித்துவிட்டது!'' என்றான் அவன்.

''அதனால் என் தலையும் நசுங்கி விட்டது!'' என்றது பாம்பு.

''சரிதான்! மனிதனைக் கண்டால் பாம்புக்குப் பயம்; பாம்பைக் கண்டால் மனிதனுக்குப் பயம். பரஸ்பரம் இருந்த பயம்தான் தங்களைத் தாங்களே இவர்கள் கொன்றுகொள்வதற்குக் காரணமாயிருந்திருக்கிறது!'' என்று விஷயத்தை விளக்கினான் சித்திரகுப்தன்.

''அப்படியானால் பயம் என்னைவிடக் கொடியது போலும்!'' என்றான் எமன் சிரித்துக்கொண்டே.

மனிதன் வெட்கத்தால் தலைகுனிந்தான்.



## 52. முடியவில்லை!

பொங்கல் நெருங்கிக் கொண்டிருந்தது. கிரகஸ்தர் ஒருவர் தம் வீட்டு வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார். அப்பொழுது, ''வேலை ரொம்ப அதிகமோ?'' என்று நரித்தனத்துடன் கேட்டுக் கொண்டே அவருடைய நண்பர் ஒருவர் அவரைப் பார்க்க வந்தார்.

''ஆமாம் வேலை ரொம்ப அதிகமாய்த்தான் இருக்கிறது. பழைய சாமான்களையெல்லாம் ஒழித்துக் கொண்டிருக்கிறேன்!'' என்றார் அவர்.

வந்தவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. இருந்தாலும் சமாளித்துக்கொண்டு, ''பழைய சாமான்கள் என்றால் உங்களுக்குப் பிடிக்காத சாமான்களையா?'' என்று மேலும் பேச்சைத் தொடர்ந்தார்.

''ஆமாம்'' என்றார் கிரகஸ்தர்.

''ஒரு காலத்தில் அவையெல்லாம் உங்களுக்குப் பிடித்த சாமான்களாகவே இருந்திருக்கும். இப்பொழுது......'' என்று நண்பர் மேலும் ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

கிரகஸ்தர் குறுக்கிட்டு, ''ஆமாம், இப்பொழுது பிடிக்காமற் போய்விட்டன. அதனால்தான் அவற்றை எடுத்துக் குப்பையில் வீசி எறிந்து கொண்டிருக்கிறேன்!'' என்றார் அலுப்புடன்.

வந்தவர் அதற்குமேல் பேசவில்லை. ''சரி, வேலை ரொம்ப அதிகம் போலிருக்கிறது; சாயந்திரம் வந்து சாவ காசமாகப் பேசிக் கொள்கிறேன்'' என்று சொல்லி விட்டு நழுவினார்.

கிரகஸ்தர், ''அவசியம் வாருங்கள்!'' என்று அவருக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

**சொ**ன்னது சொன்னபடி அன்று மாலை வந்த நண்பரை, ''வாருங்கள், வாருங்கள்!'' என்று முக மலர்ச்சியுடன் வரவேற்று உபசரித்தார் கிரகஸ்தர்.

''வேலை முடிந்துவிட்டது போலிருக்கிறது; வேண்டாத சாமான்களையெல்லாம் எடுத்து வெளியே எறிந்து விட்டீர்கள் போலிருக்கிறது!'' என்று கூறிக் கொண்டே நாற்காலியில் அமர்ந்தார் நண்பர்.

''ஆமாம்; இன்னும் ஒரே ஒரு சாமான்தான் பாக்கி யிருக்கிறது. அதை எடுத்து வெளியே எறிய என்னால் முடியவில்லை!'' என்றார் கிரகஸ்தர்.

''அது என்ன அப்படிப்பட்ட சாமான்?'' என்று நண்பர் அவரை நெருங்கி ஆவலுடன் கேட்டார்.

''வேறு என்னவாயிருக்க முடியும்?-என் மனைவி தான்!'' என்றார் கிரகஸ்தர் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே.

அவ்வளவுதான்; ''எங்கே அப்பளக் குழவி?'' என்று உள்ளே யாரோ உறுமும் சத்தம் கேட்டது.

வந்தவர் எழுந்து பிடித்தார், ஓட்டம்!



# 53. புதிய புராணம்

ஒரு சமயம் பூலோகத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுச் சென்ற நாரத முனிவருக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. அந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காக அவர் வைகுண்டத்தை நோக்கிச் சென்றார்.

அங்கே லட்சுமி சமேதராக வீற்றிருந்த நாராயணன், ''வாரும் நாரதரே! என்ன சங்கதி?'' என்று விசாரித்தார்.

''சுவாமி, எனக்கு வெகு நாட்களாக ஒரு சந்தேகம்......'' என்று ஆரம்பித்தார் நாரதர்.

''திரிலோக சஞ்சாரியான உமக்குக் கூடத் தீராத சந்தேகம் உண்டா? அப்படி என்ன சந்தேகமோ?''

''ஆதியும் அந்தமும் இல்லாத தங்களை இயற்கை உற்பாதங்களான மழையிலிருந்தும் வெய்யிலிலிருந்தும் காப்பதாக நினைத்துக்கொண்டு, பூலோகத்தில் சிலர் தங்களுக்குக் கோயில் கட்டித் தருகிறார்கள் அல்லவா? அவர்களுடைய பெயர் உலகத்தில் என்றும் நிலைத்து நிற்கிறதாம்; ஏழைகள் வாழும் குடிசைகளை ஏற்றமிகு மாளிகைகளாகக் கட்டித் தருபவர்களின் பெயர் அந்தக் குடிசைகள் மறைவது போலவே வெகு சீக்கிரத்தில் மறைந்துவிடுகிறதாம். பூலோகவாசிகளுக்கு இப்படி ஒரு நம்பிக்கை இருந்து வருகிறது. இதனால் தாங்கள் ஏழை-பங்காளன் என்பதையே அவர்கள் அடியோடு மறந்து, ஏழைகளுக்கு ஏற்றமிகு மாளிகைகள் கட்டிக் கொடுப்பவர்களை எதிர்க்கிறார்கள்; அதைவிடத் தங்களுக்குக் கோயில் கட்டித் தருவது மேல் என்றும் கருதுகிறார்கள். இந்த அக்கிரமத்துக்குத் தாங்களும் உடந்தையாயிருக்கிறீர்கள் என்று அவர்கள் சொல்வதை என்னால் நம்பமுடியவில்லை இதில்தான் எனக்கு

சந்தேகம், சுவாமி!'' என்று சொல்லிவிட்டு, நாராயண மூர்த்தியின் கமலவதனத்தைக் கண்கொட்டாமல் கவனித்தார் நாரதர்.

தமக்கு அருகிலிருந்த லட்சுமி தேவியை ஒருமுறை கடைக் கண்ணால் நோக்கிப் புன்னகை பூத்துவிட்டு நாராயணமூர்த்தி சொன்னார்:

''நாரத முனிவரே! பூலோக வாசிகளைப் போலவே நீரும் இப்படி அஞ்ஞானியாயிருப்பீர் என்று நான் நினைக்கவே இல்லை. இதில் என்ன சந்தேகம் உமக்கு? எவன் ஒருவன் இயற்கையின் உற்பாதங்களுக்கு அடிக்கடி ஆளாகும் ஏழைகளின் குடிசைகளை அகற்றி விட்டு, அவற்றுக்குப் பதிலாக அவர்களுக்கு ஏற்றமிகு மாளிகைகளைக் கட்டித் தருகிறானோ, அவன் பூத வுடலை நீத்ததும் என்னை வந்து அடைந்துவிடுகிறான்; என்னுள் ஐக்கியமாகியும் விடுகிறான். எல்லாம் வல்ல எனக்காகக் கோயில் கட்டுபவன் என்னை வந்து ஒரு நாளும் அடைவதில்லை; என்னுள் ஐக்கியமாவதும் இல்லை. இதனால் ஏழைகளின் கண்ணீரைத் துடைத்து அவர்களைச் சிரிக்க வைப்பவனின் பெயர் மண்ணுலகில் மறைகிறது; விண்ணுலகில் நிலைக்கிறது. எனக்குக் கோயில் கட்டித் தருபவனின் பெயரோ மண்ணுலகில் நிலைக்கிறது; விண்ணுலகில் மறைகிறது-இதுதான் உண்மை'' என்றார் நாராயணன். ''இப்பொழுதாவது உங்கள் சந்தேகம் தீர்ந்ததா?''

''தீர்ந்தது சுவாமி!'' என்றார் நாரதர்.



# 54. சஞ்சல புத்தி

''நாளை முதல் நம்முடைய நாட்டில் தூக்குத் தண்டனையே கிடையாது' என்று நாடெங்கும் பறை சாற்றச் சொல்லுங்கள்!'' என்று தன் மந்திரிகளுக்குக் கட்டளையிட்டான் அரசன்.

''வேண்டாம் அரசே, அதனால் துஷ்டர்கள்தான் சந்தோஷமடைவார்கள்!'' என்று மந்திரிகள் சொன்னார்கள்.

அரசன் சிரித்தான். ''நீங்கள் சொல்வது வேடிக்கையா யிருக்கிறதே, அப்படியானால் தூக்குத்தண்டனை விதிப் பதைக் கண்டு சந்தோஷம் அடைபவர்கள் எப்படி நல்லவர்களாயிருக்க முடியும்?-மதியற்ற மந்திரிகளே! போங்கள்; போய் என்னுடைய கட்டளையை உடனே நிறைவேற்றுங்கள்!'' என்றான்.

வேறு வழியின்றி மந்திரிகள் அரசனுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றி வைத் தார்கள்.

மறுநாள் வழக்கம்போல் அரச சபை கூடியது. காவலர்கள் யாரோ ஒருவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு வந்து, ''அரசே, இவன் பெயர் சுப்பன். இவன் ஏதோ விரோதத்தின் காரணமாகக் குப்பன் என்பவனை நேற்றிரவு கொலை செய்துவிட்டான்!'' என்றனர்.

''மன்னித்தோம்; சுப்பனை உடனே விடுதலை செய்யுங்கள்!'' என்றான் அரசன் பெருமையுடன்.

அதற்கடுத்த நாள் வேறொருவனைக் கைது செய்து கொண்டு வந்து, ''வேந்தர்வேந்தே, இவன் சுப்பனால் கொலையுண்ட குப்பனின் அண்ணன். இன்று காலை இவன் தன் தம்பியைக் கொன்ற சுப்பனைக் கொன்று விட்டான்!'' என்று காவலர்கள் தலைவணங்கிச் சொன் னார்கள்.

''ஓகோ, அப்படியா?-மன்னித்தோம்; இவனையும் விடுதலை செய்யுங்கள்!'' என்றான் அரசன் மீசையை முறுக்கி விட்டுக்கொண்டே.

அதற்கும் அடுத்த நாள், காவலர்கள் மற்றொருவனைச் சிறைப் பிடித்துக்கொண்டு வந்து, ''மகாராசா, இவன் நேற்றைய தினம் கொலையுண்ட சுப்பனின் நண்பன் சொக்கன். தன் நண்பனைக் கொன்ற குப்பனின் அண்ணனைக் கொன்று இவன் இன்று பழி தீர்த்துக் கொண்டு விட்டான்!'' என்றனர்.

'இது என்ன சங்கடம்? என்னுடைய கடமைகளை இவர்களே ஒருவருக்கொருவர் நிறைவேற்றிக் கொள்வது என்று தீர்மானித்துவிட்டார்களா, என்ன?' - அரசனுக்குத் தலையை வலித்தது. ஒரு கணம் அவன் யோசித்தான். மறுகணம் முகத்தில் அசடு வழிய அவன் மந்திரிகளை நோக்கிச் சொன்னான்:

''என் அன்புக்குகந்த மந்திரிகளே, உங்களுடைய யோசனையை ஏற்றுக்கொள்ள மறுத்ததற்காக என்னை மன்னியுங்கள். இந்தச் சொக்கனை உடனே தூக்கிலிட வேண்டுமென்பது என் கட்டளை! அது மட்டுமல்ல; இன்று முதல் நம்முடைய நாட்டில் தூக்குத் தண்டனை மீண்டும் அமுலுக்கு வருகிறது என்றும் நாடெங்கும் பறைசாற்றத் சொல்லுங்கள்!''

இதைக் கேட்டு மந்திரிகள் திருப்தியடையவில்லை. அவர்கள் தங்களுக்குள் கலந்து யோசித்தார்கள். கடைசியில் சஞ்சல புத்தியுள்ள ராஜாவினால் நாட்டுக்குத் தீமை உண்டாகும் என்று தீர்மானித்து, அந்த ராஜாவையே தூக்கில் போட்டுவிட்டார்கள்.



# 55. காதல்

அந்தி மயங்கிக் கொண்டிருந்தது; இருள் கவிந்து கொண்டிருந்தது-எல்லாப் புள்ளினங்களும் தங்கள் தங்கள் கூடுகளைத் தேடி வந்து சேர்ந்து விட்டன. எங்கும் நிசப்தம்.

அந்த நிசப்தத்தில் ஒரே ஒரு குயில்மட்டும் ''குக்கூ, குக்கூ!'' என்று கூவிக்கொண்டே இருந்தது.

''இந்தக் குயில் ஏன்தான் இப்படி ஓயாமல் கூவுகிறதோ, தெரியவில்லை!'' என்று தனக்குள் முணு முணுத்துக் கொண்டது ஒரு மயில்.

உலகம் இருளில் மறைந்தது; வானத்தில் நட்சத் திரங்கள் தோன்றி மின்னின-அப்பொழுதும் குயில் கூவுவதை நிறுத்தவில்லை.

என்ன செய்வது என்று ஒன்றும் புரியாமல் மயில் மேலுங் கீழுமாகப் பார்த்தது. பிறகு, ''இவ்வளவு நேர மாகியும் இந்தப் பாழும் குயிலுக்குத் தூக்கம் பிடிக்க வில்லையே!'' என்று தனக்குத்தானே அது வெறுப்புடன் கூறிக்கொண்டது.

வெள்ளி முளைத்தது; வானம் வெளுத்தது; புள்ளினங்கள் குதூகலத்துடன் சிறகடித்துக் கூவின– அப்பொழுதும் குயில் கூவுவதை நிறுத்தவில்லை; தொடர்ந்து கூவிக்கொண்டே இருந்தது.

ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது மயிலுக்கு. பொழுது விடிந்ததும் அது நேரே குயிலிடம் சென்று, ''ஏன் இப்படி ஓயாமல் ஒழியாமல் கூவிக்கொண்டே இருக்கிறாய்?'' என்று கேட்டது.

''நான் என்ன செய்வேன்? என் காதலர் என்னை விட்டுப் பிரிந்துவிட்டார். அவருடைய பிரிவை

என்னால் சகிக்க முடியவில்லை; அதனால்தான் கூவிக் கொண்டிருக்கிறேன்!'' என்று சொல்லி விட்டு, ''குக்கூ குக்கூ!'' என்று மீண்டும் அது வருந்தி வருந்திக் கூவிற்று.

''ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறது, உங்கள் காதலும் கதறலும்!'' என்று அலுத்துக்கொண்டே சென்று,காடெல்லாம் திரிந்து, நாளெல்லாம் அலைந்து அந்தக் குயிலின் காதலனை எப்படியோ கண்டுபிடித்துக் கொண்டு வந்து, அதனுடன் சேர்த்து வைத்தது மயில்.

**ம**றுநாள்-அந்தி மயங்கிக் கொண்டிருந்தது; இருள் கவிந்து கொண்டிருந்தது-எல்லாப் புள்ளினங்களும் தங்கள் தங்கள் கூடுகளைத் தேடி வந்து சேர்ந்து விட்டன - எங்கும் நிசப்தம்.

''அப்பாடி! இன்றாவது நிம்மதியாகத் தூங்கலாம்!'' என்று எண்ணி மயில் லேசாகத் தன் கண்களை மூடிற்று.

அவ்வளவுதான்; அன்றும் ஏனோ ''குக்கூ, குக்கூ'' என்று குயில் கூவ ஆரம்பித்துவிட்டது.

மயிலுக்கு ஒன்றும் புரியவில்லை. வியப்புடன் அது குயிலுக்கு அருகே சென்று, ''உன் காதலனைத்தான் கொண்டு வந்து சேர்த்துவிட்டேனே, இன்னும் என்ன வருத்தம், உனக்கு?'' என்று கேட்டது.

''அதை ஏன் கேட்கிறாய், போ! பிரிந்திருக்கும் போது வந்து சேரவில்லையே என்று வருத்தம்; வந்து சேர்ந்த பிறகு பிரியாமலிருக்க வேண்டுமே என்று வருத்தம்!'' என்று சொல்லிவிட்டுக் குயில் மீண்டும் மீண்டும் ''குக்கூ, குக்கூ!'' என்று கூவிக் கொண்டே யிருந்தது!



# 56. தத்துவ ஒத்தடம்

வீட்டில் விளக்கேற்றி வைத்ததும் மூலை முடுக்கு களில் பதுங்கிக் கொண்டிருந்த கரப்பான் பூச்சிகளுக் கெல்லாம் உற்சாகம் தாங்க முடியவில்லை; 'ஜம்' மென்று வெளியே கிளம்பி 'ஜிவ்' வென்று மேலே பறக்க ஆரம்பித்தன.

விட்டத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த ஒரு கிழப் பல்லிக்கு அவற்றைப் பார்த்ததும் நாக்கில் நீர் ஊறிற்று. ஆயினும் விரைந்து சென்று அவற்றில் ஒன்றைப் பிடித்துத் தின்னக்கூடிய சக்தி அதற்கு இல்லை. எனவே அது தன் குட்டியைப் பார்த்து, ''குழந்தாய்! பசி காதை அடைக்கிறது; ஓடோடியும் சென்று அந்தக் கரப்பான் களில் ஒன்றைப் பிடித்துக் கொண்டு வந்து தருகிறாயா?'' என்றது.

''ஆகட்டும் அம்மா!'' என்று சொல்லிவிட்டுக் குட்டிப்பல்லி விரைந்தது; அதே சமயத்தில் பறந்து திரிந்த அலுப்புத் தீர ஒரு கரப்பான் சுவரின் மேல் உட்கார்ந்தது.

அதுதான் சரியான சமயம் என்று எண்ணிக் குட்டிப் பல்லி அதற்குப் பின்னால் மெல்ல மெல்ல நகர்ந்து சென்றது.

''டபக்!''

அவ்வளவுதான்; பல்லியின் வாயில் கரப்பான் சிக்கிக்கொண்டு விட்டது.

கரப்பான் அஞ்சவில்லை; ''நன்றி!'' என்று சொல்லி விட்டு அதன் முகத்தைப் பார்த்தது.

''யாருக்கு?'' என்று கேட்டது பல்லி.

''கடவுளுக்கு!''

''ஏன், எதற்காக?''

''உன்னைப்போல் கரப்பானைக் கொன்று தின்னும் பல்லியாக என்னைப் படைக்காமல், பல்லி கொன்று தின்னும் கரப்பானாக என்னைப் படைத்தாரே, அதற்காகத்தான்!'' என்று அதற்குத் ''தத்துவ ஒத்தடம்' கொடுத்துப் பார்த்தது அது.

இதைக் கேட்டதும் பல்லியின் மனம் உருகி விட்டது. உடனே தன் பிடியிலிருந்து அதை விட்டு விடலாமா என்றுகூட அது ஒருகணம் யோசித்தது. மறுகணம் எதற்கும் தாயாரிடம் சென்று விஷயத்தைச் சொல்லிப் பார்ப்போம் என்று எண்ணி, அது வாயில் கரப்பானுடன் கிழப்பல்லியை நோக்கி விரைந்தது.

அங்கே அது கண்ட காட்சி!-எங்கிருந்தோ பூனை யொன்று வந்து கிழப் பல்லியைக் கவ்விக் கொண் டிருந்தது. அந்தப் பூனைக்கு, ''உன்னைப்போல் பல்லியைக் கொன்று தின்னும் பூனையாக என்னைப் படைக்காமல், பூனை கொன்று தின்னும் பல்லியாக என்னைப் படைத்தாரே, அந்தக் கடவுளுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்!'' என்று கரப்பானைப் போலவே கிழப் பல்லியும் 'தத்துவ ஒத்தடம்' கொடுத்துக் கொண் டிருந்தது!

இரண்டாவது முறையாக இதைக் கேட்டதுதான் தாமதம்; பல்லிக் குட்டியின் வாயிலிருந்த கரப்பான், அதன் வயிற்றுக்குள் போயே போய்விட்டது!



## 57. இது ரகசியம்

அன்று என்னவோ தெரியவில்லை; திடீரென்று தன் ஆருயிர் நண்பனான மணிமகுடத்தை நினைத்துக் கொண்டது மூலதனம்.

அவ்வளவுதான்; ஆயிரமாயிரம் தொழிலாளரைக் கசக்கிப் பிழிந்து, தன் முதலாளி தனக்கென்று தயார் செய்து வைத்திருந்த 'ரத்த பான'த்தை எடுத்து ஒரே மூச்சில் நெட்டிவிட்டு, ''ஏய், யார் அங்கே?'' என்று குரல் கொடுத்தது அது.

''எசமான்!'' என்று ஓடோடியும் வந்து அதற்கு எதிரே நின்றது லாபம்.

''ஆயத்தமாகி விட்டாயா?'' என்று மூலதனம் அதை அதட்டிக் கேட்டது.

''எதற்கு?'' என்று லாபம் கேட்டது.

''எசமானிடமா எதிர்க்கேள்வி போடுகிறாய்? கேட்டதற்குப் பதில் சொல்!'' என்றது மூலதனம்.

''இல்லை, கேட்கவில்லை; இதோ ஆயத்தமாகி விட்டேன்!'' என்று லாபம் குனிந்து, முதுகை ஆசன மாக்கி மூலதனத்துக்குக் கொடுத்தது.

அதன்மேல் தாவி ஏறிக்கொண்டு, ''சலோ, டெல்லி!'' என்று கட்டளையிட்டது மூலதனம்.

அரண்மனை வாசலை நெருங்கியதும், ''யாரைப் பார்க்கவேண்டும், நீங்கள்?'' என்று கேட்டனர் காவலர்கள்.

''மன்னரின் முடியை அலங்கரிக்கும் என் நண்பர் மணிமகுடத்தை!'' என்று அவர்களை ஏறெடுத்துகூடப் பார்க்காமல் இறுமாப்புடன் பதில் அளித்தது மூலதனம்.

'கலகல'வெனச் சிரித்தார்கள் காவலர்கள்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று மூலதனம் ஆத்திரத்துடன் கேட்டது.

''ஒன்றுமில்லை; இத்தனை வருடங்கள் எங்கே தூங்கிக்கொண்டிருந்தீர்கள் என்று தெரியாமல்தான் சிரிக்கிறோம்!''

இந்தச் சமயத்தில் லாபம் குறுக்கிட்டு, ''வேலையொன்றும் இல்லாவிட்டால் தூங்காமல் என்ன செய்வதாம்?'' என்று தன் எசமானுக்காகப் பரிந்து பேசிற்று.

''ஸ், பேசாதே!'' என்று அதன் கன்னத்தில் ஓங்கி அறைந்து, காவலர்களின்மேல் தனக்கிருந்த ஆத்திரத்தைத் தீர்த்துக்கொண்டது மூலதனம்.

''இல்லை, பேசவில்லை!'' என்று லாபம் வாயைப் பொத்திக் கொண்டது.

''கபர்தார்! நான் யார் தெரியுமா? எல்லாம் வல்ல மூலதனமாக்கும்!'' என்று காவலர்களையும் கொஞ்சம் மிரட்டிப் பார்த்தது மூலதனம்.

''தெரியும்; ஆனால் நாங்கள் யார் தெரியுமா? வருங்காலத்தில் எங்கள் சந்ததிகளாவது போதுமான அளவுக்கு வாழ்க்கை வசதிகளைப் பெற வேண்டுமென்பதற்காக நிகழ் காலத்தில் சாகத்துணிந்தவர்கள். எனவே உயிருக்கு அஞ்சவில்லை நாங்கள்!'' என்று முகத்தில் அடித்தாற்போல் அவர்கள் பதில் சொன்னார்கள்.

பாவம், மூலதனம் என்ன செய்யும்?-தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்டு, ''சரி, எங்கே என் நண்பர் மணிமகுடம்? அதையாவது சொல்லப் போகிறீர்களா, இல்லையா?'' என்று சற்றே அடக்கத்துடன் கேட்டது.

''நன்றாய்ச் சொல்கிறோம்-'கண்காட்சிச் சாலையில் இருக்கிறார்; போய்ப் பாருங்கள்!''

''அப்படியானால் இந்த அரண்மனையில் இப்போது இருப்பவர் யார்?''

''ஜனாதிபதி!''

அவ்வளவுதான் 'அக்கக்கக்'கென்று சிரித்தது மூல தனம். இந்தப் 'பணாதிபதி' இருக்கும் வரை உங்கள் 'ஜனாதிபதியின் அதிகாரம் எல்லாம் செல்லாது அப்பனே, செல்லாது என்று கருவிக் கொண்டே, ''சலோ, கண்காட்சிச்சாலை!'' என்றது மூலதனம் லாபத்தை நோக்கி.

கண்காட்சிச் சாலையை நெருங்கியதும் யாரோ விம்மி விம்மி அழும் சத்தம் மூலதனத்தின் காதில் விழுந்தது. அதைத் தொடர்ந்து, ''நண்பா, நான் என்ன செய்வேனடா? அந்த அசட்டு மக்கள் செய்த அக்கிரமத்தைப் பார்!-'ஜனநாயகம், ஜனநாயகம்' என்று சொல்லிக் கடைசியாக அவர்கள் என்னை கண்காட்சிச் சாலைக்கே அனுப்பி வைத்துவிட்டார்கள்; கண்டோர் நகைக்கும் காட்சிப் பொருளாக என்னை மாற்றி விட்டார்கள்! என் அழகென்ன, ஆடம்பர மென்ன? அரியாசனம் என்ன, ஆடும் அழகிகள் என்ன? வெண் கொற்றக் குடை என்ன, வெண்சாமரம் என்ன? - எல்லாம் போய்விட்டதா, என் நண்பா!'' என்ற ஓலமும் கேட்டது.

''ஐயோ, உனக்கா இந்தக் கதி!'' என்று ஒரே தாவாகத் தாவி அதை அப்படியே ஆலிங்கனம் செய்து கொண்டு ஒருகணம் அழுதது மூலதனம். மறுகணம் அதைத் தேற்றி, ''அழாதே நண்பா, அழாதே! உன்னைக் கண் காட்சிச் சாலைக்கு அனுப்பிவைத்த அந்த மக்களை நான் பழிக்குப்பழி வாங்குகிறேன்!'' என்று அது சூள் உரைத்தது.

''எப்படி நண்பா, எப்படி?'' என்று தன் அழுகையை நிறுத்தி, ஆவலுடன் கேட்டது மணிமகுடம்.

''நீ இருந்த இடத்தில் இனி நான் இருப்பேன்; உன்னைத் தரித்த மன்னர் இருந்த இடத்தில் இனி என் முதலாளி இருப்பார்!-அப்புறம் கேட்க வேண்டுமா? ஜனநாயகம் பணநாயகமாகும்; அந்தப் பணநாயகத்திலே உன்னைப் பழி வாங்கிய மக்கள் 'பசி, பசி' என்று பதறித் துடிப்பார்கள்!''

''அதற்கும் 'இன்கம்-டாக்ஸ்' என்று ஒன்று குறுக்கே நிற்கிறதே, நண்பா!''

''அதனால் எனக்கென்ன குறை? அதோ இருக்கிறான் பார் லாபம், அவன்தான் ஓரளவு அதற்கு இரையாவான்! - அதுவும் எப்படி? கிட்டவா, சொல்கிறேன் லஞ்சமாக!''

''லஞ்சமா!''

''ஆமாம், ஜனநாயகத்தில் என்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக என் முதலாளியிடம் அரசாங்க அதிகாரிகள் வாங்கும் லஞ்சத்துக்கு 'இன்கம்-டாக்ஸ்' என்று பெயர் - இது ரகசியம் - இப்பொழுதாவது புரிந்ததா, உனக்கு?''

''புரிந்தது நண்பா, புரிந்தது!'' என்று தலையை ஆட்டிற்று மணிமகுடம்.

மூலதனம் சிரித்தது.

அதுதான் சமயமென்று, ''வாழ்க பணநாயகம், வீழ்க ஜனநாயகம்!'' என்று லாபம் முழங்கவே, ''பலே, அப்படிச் சொல்லு!'' என்று அதன் முதுகில் ஒரு தட்டுத் தட்டிக் கொடுத்துவிட்டு, ''சலோ கஜானா!'' என்றது மூலதனம்.

''வெல்க, வாழ்க!'' என்று அவற்றை ஆசீர்வதித்து அனுப்பி வைத்தது மணிமகுடம்.



# 58. தன்னம்பிக்கை

ஒரு நாள் நாட்டுப் பசு ஒன்று, வழி தவறிக் காட்டுக்குச் சென்றுவிட்டது. நீண்ட நேரம் அலைந்து திரிந்தும் அங்கிருந்து வீட்டுக்குத் திரும்ப அதற்கு வழி தெரியவில்லை. அலைந்தலைந்து நாவறண்ட அந்தப் பசு, கடைசியாக ஒரு குளக்கரையில் நின்று தண்ணீர் குடித்துக் கொண்டிருந்தது.

அப்போது அங்கே வந்த புலி ஒன்று அதைக் கண்டதும், ''ஆஹா! பசு, நல்ல பசு! நாட்டுப் பசு, கொழுத்த பசு!'' என்று நாக்கைச் சப்புக் கொட்டிற்று.

பசு தலையைத் தூக்கி, ''ஏ, அறியாமை நிறைந்த புலியே! நீயும் நானும் ராமராஜ்யத்தில் எப்படி இருந்தோம், தெரியுமா?'' என்று ஆராய்ச்சி பூர்வமாக ஆரம்பித்தது.

''தெரியாது, அறிஞரே!'' என்று தன் அறியாமையைக் கொஞ்சங்கூடக் கூசாமல் காட்டிக் கொண்டது புலி.

''வேண்டுமானால் நாட்டுக்கு வந்து பார்! அங்கே உன்னையும் என்னையும் வைத்து எங்கள் சைத்திரிகர்கள் எவ்வளவு அற்புதமான படங்களை வரைந்திருக் கிறார்கள், தெரியுமா?''

''இருக்கலாம், படத்தில்-அதனாலென்ன?''

''நமக்குப் பெருமையில்லையா?''

''இதில் நமக்கென்ன பெருமை? - ராமனுக்கென்று சொல்லு; அதைத் தீட்டிய சித்திரக்காரனுக்கு என்று சொல்லு!''

''இவ்வளவுதானா நீ? - உன்னையும் என்னையும் போல் இன்று ஒற்றுமையின்றி இருக்கும் முதலாளி

களுக்கும் தொழிலாளிகளுக்குங்கூட அங்கே நாமல்லவா உதாரண புருஷர்களாய் விளங்கி வருகிறோம்?''

''இருக்கட்டும், இருக்கட்டும்-எல்லாம் வெறுங் கனவில்தானே நடக்கிறது?''

''இல்லை. நிஜமாகத்தான் - அந்தக் காலத்தில், நீயும் நானும் ரொம்ப ரொம்ப ஒற்றுமையாயிருந்தோமாம்; ஒரே குளக்கரையில் நின்று ஒன்றாகவே தண்ணீர் குடித்தோமாம்!''

''நல்ல கற்பனை!''

''காலம் அதைக் கற்பனையாக்கலாம். இருந்தாலும் அந்த அதிசயக் காட்சியை அன்று நேரில் பார்க்கக் கொடுத்து வைக்காதவர்களெல்லாம் இன்று ஆயிரக் கணக்கில் செலவு செய்து அதைப் படங்களில் பார்த்துக் கொண்டிருப்பது மட்டும் என்னவோ உண்மை!''

''ஏன் உண்மையாயிருக்கக் கூடாது? அதுதான் பரஸ்பரம் லாபகரமான வியாபாரமாயிருக்கிறதே!''

''எது?''

''படம் வரைவதும்; அதை விற்பதுந்தான்!''

இதைக் கேட்டதும், ''சீசீ, கொஞ்சங்கூட ரஸிகத் தன்மை இல்லையே, உனக்கு?'' என்று முகத்தைச் சுளித்தது பசு.

''என் ரஸனையெல்லாம் இப்போது உன்னைக் கொன்று தின்பதில்தான்!'' என்று புலி அதை மெல்ல நெருங்கிற்று.

''ஐயோ, வேண்டாம்-பாவம்!''

''ரொம்ப சரி, என் வயிற்றைத் திருப்திப்படுத்தி நீயாவது புண்ணியத்தைச் சம்பாதித்துக்கொள்!'' என்றது புலி.

''கூடாது; என்னால் நீ பாவியாகக் கூடாது!''

''முடியாது; உன்னால் நான் பசியோடிருக்க முடியாது!''

''அடராமா, உன்னை நம்பிய எனக்கா இந்தக் கதி?'' என்று புலம்பிற்று பசு.

''உனக்கென்ன, தன்னை நம்பாத எவனுக்குமே இந்தக் கதிதான்!-நீ மட்டும் அவனை இவனை நம்பாமல் உன்னையும் உன் கொம்புகளையும் நம்பியிருந்தால், இந்நேரம் என்னை விரட்டியிருக்கலாமே!'' என்று அதன்மேல் பாய்ந்துவிட்டது புலி.



## 59. மண்ணின் கேள்வி

''எனக்கு மட்டும் ஒரு காணி நிலம் சொந்தமா யிருந்தால் கஞ்சிக்கு ஏன் காற்றாய்ப் பறக்கப் போகி றேன்?'' என்று தன்னைப் பார்க்கும் போதெல்லாம் குடியானவர்கள் பலர் பெருமூச்சு விடுவதைக் கண்ட மண்ணுக்கு அதன் காரணம் என்னவென்று விளங்க வில்லை. ஒரு நாள் அது காற்றை நோக்கி, '' காற்றே, காற்றே! நீ எல்லோருக்கும் சொந்தமாயிருக்கிறாயே, நான் ஏன் சிலருக்கு மட்டும் சொந்தமாயிருக்கிறேன்?'' என்று கேட்டது.

''அது என்னவோ போ, எனக்கு வேலை தலைக்கு மேல் கிடக்கிறது!'' என்று சொல்லிவிட்டுக் காற்று மேலே சென்றுவிட்டது.

அடுத்தாற்போல் நெருப்பை நோக்கி, ''நெருப்பே, நெருப்பே! நீ எல்லாருக்கும் சொந்தமாயிருக்கிறாயே,

நான் ஏன் சிலருக்கு மட்டும் சொந்தமாயிருக்கிறேன்'' என்றது கேட்டது மண்.

''அது என்னவோ போ, உனக்குப் பதில் சொல்ல என்னால் முடியாது!'' என்று சொல்லிவிட்டு நெருப்பு சாம்பலாகி விட்டது.

'சரி, நீரையாவது கேட்டுப் பார்ப்போம்' என்று எண்ணி, ''நீரே! நீரே! நீ எல்லாருக்கும் சொந்தமா யிருக்கிறாயே, நான் ஏன் சிலருக்கு மட்டும் சொந்தமா யிருக்கிறேன்?'' என்று கேட்டது மண்.

''என்னைக் கேட்காதே; உன் கணவனைக் கேள்!'' என்று நிற்க நேரமில்லாமல் நீர் ஓடிவிட்டது.

கடைசியாக விண்ணை நோக்கி, ''இங்கே பாருங்கள், உங்களைத்தான்! நீங்கள் எல்லாருக்கும் சொந்தமாயிருக்கிறீர்களே, நான் ஏன் சிலருக்கு மட்டும் சொந்தமா யிருக்கிறேன்?'' என்று கேட்டது மண்.

''போடி, பைத்தியமே! உன்னிடம் இருக்கும் பொன்னை நீ ஏன் மனிதனுக்குக் காட்டினாய்? அதனால் தான் எங்களைப்போல் உன்னால் எல்லாருக்கும் சொந்த மாயிருக்க முடியவில்லை!'' என்றது வானம்.



# 60. தனித்தன்மை

''திருவிழாவில் இன்று ஏகக் கூட்டம்!'' என்றது நாதசுரம்.

''ஆமாம், ஆமாம்!'' என்று 'ஒத்து' ஊதிற்று ஒத்து.

''யாரால் கூட்டம், தெரியுமா?-என்னால்தான்!'' என்று பீற்றிக்கொண்டது தவுல்.

அதற்கும், ''ஆமாம், ஆமாம்!'' என்று ஒத்து ஊதிற்று ஒத்து.

நாதசுரத்திற்கு இது பிடிக்கவில்லை; ''எல்லாருக்கும் 'ஆமாம், ஆமாம்' தானா?-ஐயோ, என் ஒத்தே!'' என்று அது அங்கலாய்த்தது.

''ஆமாம், ஆமாம்!'' என்று அதற்கும் ஒத்து ஊதிற்று ஒத்து.

தாளங்கள் இரண்டும் 'டங்' என்று சிரித்தன.

''நீங்கள் ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று அவற்றின் மேல் எரிந்து விழுந்தது தவுல்.

''என்னை மறந்துவிட்டுப் பேசுகிறீர்களே, அதனால் தான் சிரித்தேன்!'' என்றது அவற்றில் ஒன்று.

''போடா, பொடிப் பயலே! உன்னை மறந்தால் என்னவாம்?''

''உங்கள் கச்சேரியைக் கேட்கக் கூலிக்கு ஆள் பிடிக்க வேண்டியதுதான்.''

இந்த சமயத்தில், ''ஏய் அதில் என்னையும் சேர்த்துக் கொள்ளாதே; என்னால் தனியாக வாசிக்க முடியும்-அதைக் கேட்கக் கூட்டமும் சேர்க்க முடியும்!'' என்றது நாதசுரம்.

''என்னால் மட்டும் முடியாதா?'' என்று திருப்பிக் கேட்டது தவுல்.

''முடியுமே, கூட்டத்தைக் கலைக்க!'' என்று நாதசுரம் நகைத்தது.

''அதை இப்பொழுதே பார்த்துவிட்டால் போச்சு!'' என்று 'கும்கும், கும்கும்' என்று முழங்கிற்று தவுல்.

கூட்டம் கூடிற்று.

''உனக்கு நான் சளைத்தா போய்விட்டேன்?'' என்று 'பீப்பீ, பீப்பீ' என்று தலையை ஆட்டி ஆட்டி வாசிக்க ஆரம்பித்தது நாதசுரம்.

அதற்கும் கூட்டம் கூடிற்று.

''நமக்கு ஏன் வம்பு?'' என்று இரண்டுக்கும் சேர்ந்தாற்போல் 'ஒத்து' ஊதி, கூட்டத்தாரின் அனுதாபத்தைப் பெற்றது ஒத்து.

''பார்த்தாயா, இவர்கள் லட்சணத்தை?- பாரதியார் சும்மாவா சொன்னார், ''தாளம் தாளம் தாளம்- தாளத்திற் கோர் தடையுண்டாயின்-கூளம், கூளம், கூளம் என்று!'' என்றது தாளங்களில் ஒன்று.

''உண்மை; எந்தக் கச்சேரியும் நான் இல்லாமல் சோபிப்பதில்லை!'' என்றது இன்னொன்று.

''அதென்ன தம்பி, 'நான்' என்கிறாய்?''

''அது அப்படித்தான் அண்ணே, நான் என்றால் நான்தான்!''

''நாசமாய்ப் போச்சு! நான் இல்லாமல் உன்னால் தாளம் போட்டுவிட முடியுமா, நான் இல்லாமல் உன்னால் கூட்டம் சேர்த்துவிட முடியுமா?''

''ஏன் முடியாது?-இதோ போட்டுக் காட்டுகிறேன்; கூட்டத்தையும் சேர்த்துக் காட்டுகிறேன்!'' என்று துள்ளித் துள்ளித் குதித்தது அது.

''ம், குதி குதி!'' என்றது இது.

''நீ ஒன்றும் சொல்லவேண்டாம்!'' என்றது இது.

கடைசியாக அந்த ஒற்றைத் தாளத்திற்குக் குதித்துக் குதித்துக் கால் வலித்ததுதான் மிச்சம். ஓசையும் ஒலிக்க வில்லை; கூட்டமும் சேரவில்லை.

''சரிதான்; இங்கே உள்ளவர்களால் என் தாளத்தை ரசிக்க முடியவில்லை!'' என்று சொல்லிச் சமாளிக்கப் பார்த்தது அது.

''தாளம் போட்டால்தானே ரசிப்பதற்கு?'' என்று இடித்துக் காட்டிற்று இது.

அதற்குள் மற்ற வாத்தியங்கள் அனைத்தும் வாசிப்பதை நிறுத்திவிட்டு, அவற்றை வேடிக்கை பார்க்க ஆரம்பித்து விட்டன.

அவ்வளவுதான்; வெட்கத்தால் தலை குனிந்த தாளங்களில் ஒன்று இன்னொன்றைப் பார்த்துப் பின் வருமாறு சொல்லிற்று:

''என்னை மன்னித்து விடுங்கள்; எல்லாராலும் தனித்து இயங்க முடியாது என்பதை நான் இன்றுதான் உணர்ந்தேன்!''



# 61. தொண்டு

மழையில் நனைந்து வந்த குடும்பத் தலைவர் ஒருவர், செருப்போடு குடையையும் மூடி நடையில் வைத்துவிட்டு உள்ளே சென்றார்.

அவருடைய தலை மறைந்ததும், ''அப்பாடா, இன்றுதான் என் கவலை தீர்ந்தது!'' என்று சொல்லி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டது செருப்பு.

''அப்படி என்ன கவலை உனக்கு?'' என்று குடை கேட்டது.

''இந்த வீட்டுத் தலைவருக்கு நீ செய்வதும் தொண்டு தான்; நான் செய்வதும் தொண்டுதான், ஆனால்

இத்தனை நாளும் உன்னை மதித்து வந்தது போல் அவர் என்னை மதித்து வந்தாரா?''

''ஏன், மதிக்காமல் என்ன செய்தாராம்?''

''எங்கே மதித்தார்?...உனக்கு உள்ளே இடங் கொடுத்தால் எனக்கு வெளியே இடங் கொடுப்பார்!''

''இன்று?''

''நீயும் நடையில்; நானும் நடையில்-இதைப் பார்க்க எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாயிருக்கிறது, தெரியுமா?''

இதைக் கேட்டதும் குடை 'இடியிடி' என்று சிரித்தது; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது செருப்பு.

''உன்னுடைய மகிழ்ச்சி இன்னும் கொஞ்ச நேரத்திற் கெல்லாம் அற்ப மகிழ்ச்சியாகப் போய்விடப் போகிறதே என்றுதான் சிரிக்கிறேன்!''

''அதுதான் இல்லை!''

''எதுதான் இல்லை?''

''என்னுடைய மகிழ்ச்சி அற்ப மகிழ்ச்சியாகப் போவதில்லை-இனி நீயும் ஒன்றுதான்; நானும் ஒன்று தான். உன்னுடைய சேவையும் ஒன்றுதான்; என்னுடைய சேவையும் ஒன்றுதான்!''

''கொஞ்சம் பொறு; என் மேலிருக்கும் தண்ணீர் வடியட்டும்!'' என்றது குடை.

செருப்புக்கு ஒன்றும் புரியவில்லை.

''தண்ணீரா?'' என்று வியப்புடன் கேட்டவாறு வாயைப் பிளந்தது. அதே சமயத்தில் வீட்டுக்குரியவர் வந்தார். ''இதோ அவரும் வந்து விட்டார்; என்ன நடக்கிறதென்று பார்'' என்றது குடை.

அவ்வளவுதான்; வந்தவர் தண்ணீர் வடிந்த குடையை எடுத்துக்கொண்டு உள்ளே சென்றார்.

ஏமாற்றமடைந்த செருப்பு தனக்குத் தானே சொல்லிக் கொண்டது. ''செய்யும் தொண்டு ஒன்றாயிருந்தாலும், அதன் மதிப்பு செய்பவர்களைப் பொறுத்துத்தான் இருக்கும்போலிருக்கிறது!''



## 62. நீதி

**பெ**ன்சில் சீவிய கத்தியைப் பேனாவுக்கு அருகே வைத்தார், ஒரு நீதிபதி, அந்த கத்தியைக் கண்டதும் அருவருப்புடன் ஒதுங்கி, ''போ, எட்டிப்போ!'' என்றது பேனா.

''என்ன கேடு, உனக்கு? என்னை ஏன் இப்படி விரட்டுகிறாய்?'' என்று கத்தி கேட்டது.

''உன்னைக் கண்டாலே எனக்குப் பிடிக்கவில்லை. உன் மேல் ரத்த வாடை வீசுகிறது!'' என்றது அது;

''இப்பொழுது நான் பென்சிலைத்தானே சீவி விட்டு வந்தேன்?'' என்றது இது.

''பேசாதே! ஒரு மாணவன் கையில் இருக்கும் போது பென்சிலைச் சீவுகிறாய்; கொலைகாரன் கையில் இருக்கும் போது நீ எவன் தலையையாவது சீவுகிறாய்!''

''நீயும் அப்படித்தானே?-மாணவன் கையில் இருக்கும்போது பாடம் எழுதுகிறாய்; இதோ இருக்கிறாரே, இந்த நீதிபதியின் கையில் இருக்கும்போது 'தீர்ப்பு' என்ற பேரால் எவனையாவது தூக்கில் போடச் சொல்லி எழுதுகிறாய்!''

''மூடு வாயை! எதைச் செய்தாலும் நான் தெய்வத்தின் பேரால் செய்கிறேன்; நீதியின் பேரால் செய்கிறேன்'' என்று அடித்துச் சொல்லிற்று பேனா.

''தெய்வம்!- அப்படி ஒன்று இருப்பதாக நம்பிக்கை இருக்கிறதா, உனக்கு?'' என்று இடித்துக் கேட்டது கத்தி.

''இருக்கிறது; நிச்சயமாக இருக்கிறது!'' என்றது அது.

''சரி, அவரவர்கள் செய்யும் பாவ-புண்ணியத்துக்குத் தக்கபடி அவர் தண்டிக்கிறார் என்பதில் நம்பிக்கை இருக்கிறதா, உனக்கு?'' என்றது இது.

''இருக்கிறது; நிச்சயமாக இருக்கிறது!'' என்றது அது மீண்டும்.

''அப்படியானால் கொலைகாரனைத் தண்டிக்கும் போது உனக்கு ஏன் தெய்வத்தின் மேல் நம்பிக்கை யில்லாமல் போய்விடுகிறது?'' என்று கேட்டது இது.

''அதுதான் நீதி!'' என்றது பேனா.

''நீதி!-குற்றமுள்ள நீ, குற்றமற்ற கடவுள் படைத்த உயிரைக் கொல்வதா, நீதி?'' என்று கத்தி கேட்டது

அதற்குமேல் பேனா பேசவில்லை-காரணம், கத்தியின் மேல் வீசுவது போலிருந்த ரத்த வாடை தன் மேலும் வீசுவது போலிருந்ததை அது அப்போது உணர்ந்ததுதான்!



''மூடு வாயை! எதைச் செய்தாலும் நான் தெய்வத்தின் பேரால் செய்கிறேன்; நீதியின் பேரால் செய்கிறேன்'' என்று அடித்துச் சொல்லிற்று பேனா.

''தெய்வம்!- அப்படி ஒன்று இருப்பதாக நம்பிக்கை இருக்கிறதா, உனக்கு?'' என்று இடித்துக் கேட்டது கத்தி.

''இருக்கிறது; நிச்சயமாக இருக்கிறது!'' என்றது அது.

''சரி, அவரவர்கள் செய்யும் பாவ-புண்ணியத்துக்குத் தக்கபடி அவர் தண்டிக்கிறார் என்பதில் நம்பிக்கை இருக்கிறதா, உனக்கு?'' என்றது இது.

''இருக்கிறது; நிச்சயமாக இருக்கிறது!'' என்றது அது மீண்டும்.

''அப்படியானால் கொலைகாரனைத் தண்டிக்கும் போது உனக்கு ஏன் தெய்வத்தின் மேல் நம்பிக்கை யில்லாமல் போய்விடுகிறது?'' என்று கேட்டது இது.

''அதுதான் நீதி!'' என்றது பேனா.

''நீதி!-குற்றமுள்ள நீ, குற்றமற்ற கடவுள் படைத்த உயிரைக் கொல்வதா, நீதி?'' என்று கத்தி கேட்டது

அதற்குமேல் பேனா பேசவில்லை-காரணம், கத்தியின் மேல் வீசுவது போலிருந்த ரத்த வாடை தன் மேலும் வீசுவது போலிருந்ததை அது அப்போது உணர்ந்ததுதான்!



# 63. புகழரசி

காலதேவன் வழக்கம்போல் வான வீதியிலே பவனி வந்துகொண்டிருந்தான். எழில் மிகுந்த புகழரசி மணம் மிகுந்த மலர் சூடி அவனுக்கு எதிரே வந்தாள்.

வரையறையற்ற வயதானபோதிலும் வற்றாத இளமையுடன் விளங்கிய அந்த வானுலகவாசிகள் இருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் புன்னகை பூத்தனர்.

''வா, வா! நெடுநாட்களாக உன்னை நான் தேடிக் கொண்டிருந்தேன்; எதிர்பாராத விதமாக உன்னை இன்று சந்தித்ததில் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி!'' என்றான் காலதேவன்.

''ஏனாம்?'' என்று பெண் குலத்துக்கே உரித்தான நெளிவு குழைவுகளுடனும், அங்க அசைவுகளுடனும் நெஞ்சையள்ளும் தீங்குரலில் புகழரசி என்று பெயர் பெற்றிருந்த அந்த அழகரசி கேட்டாள்.

''பூலோகத்திலுள்ள கலைஞர்களைப் பற்றி உன்னிடம் நான் சிறிது நேரம் பேசவேண்டும்; எனக்குத் தான் நிற்க நேரமில்லையென்று உனக்குத் தெரியுமே? -ஏறிக் கொள், ரதத்தில்!'' என்றான் காலதேவன்.

புகழரசி மறுக்கவில்லை; ஏறிக்கொண்டாள்.

''கலைஞர்கள் இருக்கிறார்களே, அவர்கள் மிகவும் பொல்லாதவர்களாயிருக்கிறார்கள் - உன்னுடைய தலையை உருட்டுவதற்குப் பதிலாக அவர்கள் என்னுடைய தலையை உருட்டுகிறார்கள்!'' என்று ஆரம்பித்தான் காலதேவன்.

புகழரசிக்கு விஷயம் புரிந்துவிட்டது. ஆனால் ஒன்றும் சொல்லவில்லை; சிரித்தாள்.

''நான் ஓடிக்கொண்டே இருக்கிறேனாம்; நீயோ அவர்களைக் கடைக்கண்ணால் கூடப் பார்க்கவே மாட்டேன் என்கிறாயாம்!'' என்றான் காலதேவன்.

''காலம் போய்க்கொண்டே இருக்கிறது, கனவு நனவாகவில்லை என்றுதானே அவர்கள் கவலைப் படுகிறார்கள்?''

''ஆமாம், ஆமாம்.''

''அதற்காக யாராவது கவலைப்படுவார்களோ?''

''கவலைப்படாமல் வேறு என்ன செய்வது? கலைத் தொண்டோ தற்சமயம் பூலோகத்தில் பலனை எதிர்பாராமல் செய்ய வேண்டிய கருமமாயிருக்கிறது. கிருஷ்ண பரமாத்மா கலைஞர்களுக்கென்றே அந்தக் கீதோபதேசத்தைச் செய்தாரோ என்று கூடச் சந்தேகிக்க வேண்டியிருக்கிறது- மற்றவர்களைப் போலவே தாங்களும் வாயும் வயிறும் படைத்தவர்கள் என்பதை யார் மறந்தாலும் கலைஞர்கள் மறக்க முடியுமா? மறந்தால் வாயும் வயிறுந்தான் அவர்களைச் சும்மா விடுமா? - இருந்தாலும் அவற்றை அவ்வளவாகப் பொருட்படுத்தாமல் தங்களுடைய ஆத்ம திருப்திக்காக அவர்கள் கலைத்தொண்டில் இறங்குகிறார்கள். இந்த லட்சணத்தில் பலன் பொருளாகக் கிடைக்காவிட்டாலும் புகழாகவாவது அவர்களுக்குக் கிடைக்க வேண்டாமா?''

''திறமையிருந்தால்தான் புகழ் அவர்களைத் தேடிக்கொண்டு வருமே!''

''உண்மை!-ஆனால் திறமையில்லாதவர்களைப் பற்றி இப்பொழுது நான் பேசவில்லையே; திறமை யுள்ளவர்களைப் பற்றித்தான் பேசுகிறேன்!''

''அதற்கு அவசரப்பட்டால் முடியுமா? பொருத் திருந்து பார்க்கவேண்டும்.''

''எவ்வளவு காலம் பொறுப்பது? - நானாவது அவர்களுக்காக நின்று தொலைக்கிறேனா?-அதுவும் இல்லை; ஓடிக்கொண்டேயிருக்கிறேன்!''

''வேண்டுமானால் அவர்கள் ஒன்று செய்யலாமே? உங்களைத்தான் அவர்களால் நெருங்க முடியாது; நெருங்கினாலும் பிடித்து நிறுத்த முடியாது - கடிகாரத்தைக் கூடவா அவர்களால் நிறுத்த முடியாது?''

''வேடிக்கைதான்; அதை நிறுத்தினால்?''

''கனவு நனவாகும் வரை காலம் போகாமல் இருக்கிறது!'' என்று சொல்லிவிட்டுக் 'கலகல' வென்று நகைத்தாள் புகழரசி.

''அபூர்வமான யோசனைதான்!-பொழுது விடிய வேண்டாம் என்பதற்காக யாரோ ஒருத்தி சேவற் கோழியை எடுத்து ஒளித்து வைத்தாளாமே, அவள் கூடப் புத்திசாலித்தனத்துக்கு உன்னிடம் பிச்சை எடுக்க வேண்டும் போலிருக்கிறதே! - ஆனால் இந்த அருமை யான யோசனையை அவர்களிடம் நான் சொல்லக் கூடாது; நீதான் சொல்லவேண்டும்!'' என்றான் கால தேவன்.

''நான்தான் உயிரோடிருக்கும் வரை அவர்களை நாடுவதே கிடையாதே!''

''அப்படியானால் அவர்கள் சொல்வது ரொம்ப சரி!''

''என்ன சொல்கிறார்கள்?''

''செத்தாரைத்தான் நீ வாழ வைப்பாய் என்று சொல் கிறார்கள்!''

''உண்மை; ஆனால் அதற்குக் காரணம் இருக்கிறது!''

''என்ன காரணம்?''

''மனிதன் உயிரோடிருக்கும் போது குற்ற முள்ளவனாயிருக்கிறான்; குற்றமற்றவனாயிருந்தாலும் மற்றவர்களால் குற்றமுள்ளவனாகக் கருதப்படுகிறான். இதற்குக் கலைஞனும் விதிவிலக்கல்ல!''

''இறந்த பிறகு?''

''மனிதனும் சரி, கலைஞனும் சரி - குற்றமற்றவர் களாகிறார்கள் - மரணம், அவர்களுடைய குற்றங்களை ஜீரணித்துக்கொண்டு விடுகிறது!''

''அப்படியானால் இறந்த பிறகுதான் நீ அவர்களை நாடுவாயோ?''

''ஆமாம்.''

''இந்த அக்கிரமத்தைத்தான் அவர்கள் வெறுக் கிறார்கள்!''

''இதில் என்ன அக்கிரமம் இருக்கிறது?''

''செத்த பிறகு நீ கலைஞர்களை நாடும் அக்கிரமந் தான்; அதனால் அவர்களுக்கு என்ன பயன்?''

''இல்லாமல் என்ன?-என்னுடைய அருளைப் பெறாத கலைஞர்கள் மரணத்துக்குப் பின் மண்ணோடு மண்ணாக மறைகிறார்கள்: பெற்றவர்களோ அமரர் களாகி மனித உள்ளத்தில் என்றும் நீங்காத இடத்தைப் பெறுகிறார்கள்.''

''அந்த இடத்தை அவர்கள் ஜீவிய வந்தர்களா யிருக்கும் போதே பெற்றால் என்ன?''

''அதனால் அவர்களுக்கு நன்மை இருக்காது!''

''நன்மையில்லாவிட்டாலும் தீமையொன்றும் இருக்காதே?''

''வேண்டிய மட்டும் இருக்கும்-ஏனெனில் புகழினால் கர்வமடையும் கலைஞர்களுமுண்டு; பெருமையடையும் கலைஞர்களுமுண்டு. கர்வம் கலையைக் குலைக்கும்; பெருமை கலையை வளர்க்கும் - இது எப்படியானாலும் உயிரோடிருக்கும் போதே ஒரு கலைஞனுக்குக் கிடைக்கும் புகழை உண்மையான புகழ் என்று ஜனங்கள் நம்ப மாட்டார்கள்!''

''ஏன் நம்பமாட்டார்கள்?''

''கலைஞன் உயிரோடிருக்கும்போது அவனுடைய குற்றங்கள் பெரிதாகவும், கலைத்திறன் சிறிதாகவும் ஜனங்களுக்குத் தோன்றுகிறது. ஆகவே, என்னுடைய அருள் ஒரு கலைஞனுக்கு அவனுடைய ஜீவிய காலத்தில் நியாயமாகக் கிடைத்தாலும், ஏதோ காரியார்த்தமாக நாலு பேர் சேர்ந்து கொண்டு அவனைத் தூக்கி விடுவதாக ஜனங்கள் புறம் பேசுகிறார்கள். அசூயையும் பொறாமையும் சேர்ந்து அவர்களுடைய உள்ளத்தை அவ்வாறு மாசுபடுத்தி விடுகின்றன!''

''சரி, கெட்டவர்களுடைய உள்ளத்தைத்தானே கெடுக்கும்? நல்லவர்களுடைய உள்ளத்தைக் கெடுக்காதே?''

''கட்டாயம் கெடுக்கும்; ஏனெனில் கெட்டவர்களோடு நல்லவர்களுடைய உள்ளத்தையும் சேர்த்துக் கெடுக்கக்கூடிய சக்தி அசூயைக்கும் பொறாமைக்கும் இருக்கிறது!''

''அதனால் என்ன? - ஜனங்கள் நம்பினால் நம்பட்டும். நம்பாவிட்டால் போகட்டுமே!''

''ஜனங்கள் நம்பவில்லையென்றால் கலைஞனுக்கு என்னால் கிடைத்த புகழினால் எந்த விதமான

பெருமையும் இருக்காது. பெருமையற்ற புகழை ஒரு கலைஞன் அடைவதும் ஒன்றுதான்; அடையாம லிருப்பதும் ஒன்றுதான்!''

அதற்காகக் கலைஞர்கள் சாகும்வரை உன்னை நினைந்து உருகுவதா? அவர்கள்மேல் உனக்குக் கொஞ்ச மாவது இரக்கமே கிடையாதா?''

''இரக்கம் இருப்பதால்தான் மரணத்துக்குப் பின் அவர்களை நான் நாடுகிறேன்; மக்களின் அவ தூறிலிருந்து அவர்களைக் காக்கிறேன்; மங்காத புகழை அவர்களுக்கு அளிக்கிறேன்; என்னால் அவர்களுடைய பூதவுடல் கர்வமடையாமல் புகழுடல் பெருமையடைய வேண்டுமென்று விரும்புகிறேன்; அதன் பயனாகக் கலையைக் குலைக்காமல் வளர்க்கிறேன் - இந்த உண்மையை அறியாத கலைஞர்கள் சாகும் வரை என்னை நினைந்து உருக வேண்டியதே!'' என்று சொல்லி விட்டு, ஓடும் ரதத்திலிருந்து கீழே குதித்தாள் புகழரசி.

''அப்படியானால் அதுவரை அப்பாவிக் கலை ஞர்கள் என்னுடைய தலையை உருட்டிக் கொண்டே இருக்க வேண்டியதுதானா?'' என்றான் காலதேவன் ஏமாற்றத்துடன்.

புகழரசி சிரித்துக் கொண்டே அவனுடைய பார்வை யிலிருந்து மறைந்தாள். அந்த உல்லாசக்காரியின் சிரிப்பொலி நெடுநேரம்வரை காலதேவனின் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தது!



# 64. கட்டுப்பாடு

ஊர் முச்சந்தியில் ஒரு கூட்டம்; அந்தக் கூட்டத்துக்கு நடுவே சங்கிலியால் பிணைக்கப் பட்டிருந்த ஒரு குரங்கை இடது கையால் பிடித்துக் கொண்டு, வலது கையில் இருந்த கோலைத் தரையில் தட்டி, 'தையத் தக்கா, தைய்த் தக்கா!' என்று தாளம் போட்டுக் கொண்டிருந்தான் ஒரு குரங்காட்டி. அவன் கட்டுப் பாட்டிலிருந்த குரங்கு அவனுடைய தாளத்துக் கேற்ற வாறு ஆடிக்கொண்டிருந்தது. திடீரென்று அதற்கு ஓர் அசட்டுத்தனமான யோசனை தோன்றிற்று; 'இவன் தாளத்துக்கு ஏற்றாற்போல்தான் நாம் எப்போதும் ஆடிக் கொண்டிருக்க வேண்டுமா? இவனுடைய கட்டுப் பாட்டுக்குக் கீழ்தான் நாம் என்றும் கட்டுப்பட்டிருக்க வேண்டுமா? நாமும் ஒருநாள் தாளம் போட்டு இவனை ஆட்டிவைத்தால் என்ன?' என்று நினைத்த அது, குரங் காட்டியின் கையில் இருந்த கோலை, அவன் எதிர்பாராத விதமாகப் பிடுங்கி, அவனையே தன் விருப்பத்துக்கு ஏற்றாற்போல் ஆட்டிவைக்க முயன்றது.

குரங்காட்டி கெட்டிக்காரன். அவன் அதற்கு இடம் கொடுப்பானா? ''அவ்வளவு திமிரா உனக்கு?'' என்று அது தன்னிடமிருந்து பிடுங்கப் பார்த்த கோலாலேயே அதன் தலையில் ஒரு போடு போட்டு அதை விரட்டி விட்டான்.

அவ்வளவுதான்; தன் மார்பைத் தானே தட்டிக் காட்டி, ''இந்தக் குரங்கில்லாமல் உன்னால் எப்படிக் கூட்டம் சேர்க்க முடிகிறது என்பதை நான் பார்த்து விடுகிறேன்!'' என்று அது ஊரெல்லாம் சொல்லிக் கொண்டு திரிந்தது.

மறுநாள் அதே முச்சந்தி; அதே கூட்டம்; அந்தக் கூட்டத்துக்கு நடுவே அதே குரங்காட்டி. ஆனால் ஒரே ஒரு வித்தியாசம் - இப்போது அவன் தாளத்துக்கு ஏற்றபடி அங்கே ஆடிக்கொண்டிருந்த குரங்கு முதல் நாள் அவனையே ஆட்டி வைக்க முயன்ற குரங்கு அல்ல; வேறொரு குரங்கு!

அதைப் பார்த்த அசட்டுக் குரங்கு தனக்குத் தானே சொல்லிக் கொண்டது:

''நம்மால் ஆடத்தான் முடியும்; ஆட்டி வைக்க முடியாதுபோல் இருக்கிறது!''



# 65. குறுக்கு வழி

பழக் கடைக்காரன் ஒருவன் ஒரு நாள் கொத்த வால்சாவடிக்குச் சென்று சிறிதும் பெரிதுமாக நூறு ஆரஞ்சுப் பழங்களை வாங்கிக்கொண்டு வந்தான். சிறியவற்றையெல்லாம் அவன் கூடைக்கு அடியில் போட்டான்; பெரியவற்றை அவற்றுக்கு மேலே அழகாக அடுக்கி வைத்தான்.

அவன் அவ்வாறு செய்தது சிறிய பழங்களுக்குப் பிடிக்கவில்லை. எனவே, ''அக்கிரமம்!'' என்று அவற்றில் ஒன்று முணுமுணுத்தது.

''அநியாயம்!'' என்று சிணுசிணுத்தது இன்னொன்று.

''என்ன இருந்தாலும் நாம் சிறிய பழங்கள்தானே? பெரிய பழங்கள் நமக்கு மேலே இருப்பதுதான் அழகு, நியாயமுங்கூட!'' என்றது ஒரு சாதுப் பழம்.

''நமக்கு மேலே பெரிய பழங்களா, நாம் இல்லா விட்டால் அவை எப்படி மேலே நிற்குமாம்? பார்த்து விடுவோம் ஒரு கை!'' என்றது ஒரு முரட்டுப் பழம் தன் முஷ்டியை உயர்த்தி.

''பேஷாய்ப் பார்க்கலாம்!'' என்று அந்த முரட்டுப் பழம் சொன்னதை இன்னொரு புரட்சிப் பழம் அப்படியே ஆமோதித்தது.

''அதெல்லாம் சரி; எப்படிப் பார்ப்பதாம்?'' என்றது ஓர் அசட்டுப் பழம்.

''அதோ, கூடைக்கு அடியில் ஒரு சிறு பொத்தல் இருக்கிறது பாருங்கள்! அதன் வழியே நாம் ஒவ்வொருவ ராக வெளியேறிவிடுவோம்; பெரிய பழங்கள் கீழே சரிந்து விழுந்து அவமானப்படட்டும்!'' என்றது ஒரு சமர்த்துப் பழம்.

''சரியான யோசனை!'' என்று துள்ளிக் குதித்தது ஒன்று.

''தந்திரத்துக்கு நரிகூட நம்மிடம் பிச்சை வாங்க வேண்டும்!'' என்று அதைத் தட்டிக் கொடுத்தது இன்னொன்று.

அவ்வளவுதான்; ''அப்படியே செய்வோம், அப்படியே செய்வோம்!'' என்று சிறிய பழங்க ளெல்லாம் கூடையை விட்டு ஒன்றன் பின் ஒன்றாக அந்தப் பொத்தலின் வழியே உருண்டு வெளியேறின. இதனால் சரிந்து விழுந்த பெரிய பழங்களைக் கண்டு அவை தங்கள் தலையை ஆட்டி ஆட்டிச் சிரித்தன.

பெரிய பழங்கள் ஒன்றும் சொல்லவில்லை; தலைக்கு ஒரு மௌனப் புன்னகை புரிந்துவிட்டுப் பேசாமல் இருந்தன.

பழக் கடைக்காரன் வந்தான்; சிறிய பழங்களெல்லாம் வெளியே வந்துவிட்டதற்குக் காரணம் என்னவென்று கவனித்தான்; கூடைக்கு அடியில் ஒரு பொத்தல் இருப்பது அவன் கண்ணில் பட்டது. உடனே அதை அடைத்து அவன் சிறிய பழங்களை எடுத்து மீண்டும் கூடைக்கு அடியில் போட்டான்; பெரிய பழங்களை எடுத்து அவற்றுக்கு மேலே அடுக்கினான்.

அவன் அடுக்கி முடித்ததும் சிறிய பழங்களில் ஒன்று பெருமூச்சு விட்டுக்கொண்டே சொல்லிற்று:

''குறுக்கு வழியில் நாம் முன்னேற முயன்றது பலிக்கவில்லை; பெரிய பழங்களைப்போல முன்னேற வேண்டுமானால், நாமும் அவற்றைப் போல் பருத்தால்தான் முடியும் போலிருக்கிறது!''



## 66. நிதர்சனம்

எதையும் நம்பாதவனைப் பார்த்து, ''குயில் கூவும் என்பதையாவது நம்புகிறாயா நீ?'' என்றார் ஒரு பெரியவர்.

''மாட்டேன்; கூவுவதைக் கேட்டால்தான் நம்புவேன்!'' என்றான் அவன்.

குயில் கூவிற்று; அவன் நம்பினான்.

''மயில் ஆடும் என்பதையாவது நம்புகிறாயா நீ?'' என்றார் பெரியவர்.

''மாட்டேன்; ஆடினால்தான் நம்புவேன்!'' என்றான் அவன்.

*மயில் ஆடிற்று; அவன் நம்பினான்.*

*''நாய் குரைக்கும் என்பதையாவது நம்புகிறாயா நீ?'' என்றார் பெரியவர்.*

*''மாட்டேன்; குரைத்தால்தான் நம்புவேன்!'' என்றான் அவன்.*

*நாய் குரைத்தது; அவன் நம்பினான்.*

*''நரி ஊளையிடும் என்பதையாவது நம்புகிறாயா நீ?'' என்றார் பெரியவர்.*

*''மாட்டேன்; ஊளையிட்டால்தான் நம்புவேன்!'' என்றான் அவன்.*

*நரி ஊளையிட்டது; அவன் நம்பினான்.*

*''சரி, பாம்பு கடிக்கும் என்பதையாவது நம்புகிறாயா நீ?'' என்றார் பெரியவர்.*

*''மாட்டேன்; கடித்தால்தான் நம்புவேன்!'' என்றான் அவன்.*

*பாம்பு கடித்தது. ஆனால்.....*

*பாவம், அதை நம்பத்தான் அவன் இல்லை!*



# 67. ஏணி சொன்ன ஏழு கதைகள்

## 1

என்னை வைத்து மேலே ஏறிச் சென்ற ஒருவனைப் பார்த்து, " மேலே போனதும் எல்லாரையும்போல நீயும் என்னை மறந்துவிடாதே!" என்றேன் நான்.

"உன்னை எதற்கு நான் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்?"' என்றான் அவன்.

"மறுபடியும் கீழே இறங்கி வருவதற்காகவாவது நீ என்னை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டாமா?"

"மேலே போன எவனும் அதற்கும் மேலே போகத் தான் விரும்புவானே தவிர, உன்னை நினைவில் வைத்துக்கொண்டு கீழே இறங்க விரும்ப மாட்டான் என்பதை அறியாத உனக்காக நான் அனுதாபப் படுகிறேன்!" என்றான் அவன்.

## 2

"எந்த மனிதனையும் மேலே ஏற்றிவிடும் நான் மட்டும் எப்போது பார்த்தாலும் ஏன் கீழேயே நின்று கொண்டிருக்கிறேன்?" என்று ஒரு நாள் என்னை நானே கேட்டேன்.

என் மனக் குரல் சொல்லிற்று:

"அதுதான் விதி! கடவுளால் படைக்கப்பட்ட மனிதனுக்கு மட்டுமல்ல, மனிதனால் படைக்கப்பட்ட உனக்கும் அந்த விதி உண்டு!"

## 3

ஒரு நாள், ''உன்னை நான் தாங்காவிட்டால் நீ என்ன ஆவாய்?' என்று சுவர் என்னைக் கேட்டது.

''என்ன ஆவேன்? கீழே விழுவேன்!'' என்றேன் நான்.

''நீ கீழே விழுந்தால் மனிதன் என்ன ஆவான்?''

''என்ன ஆவான்? மேலே போக முடியாமல் கீழேயே நிற்பான்!''

''அப்படியானால் மனிதனுக்கு நீ ஆதாரம், உனக்கு நான் ஆதாரம் இல்லையா?'' என்றது சுவர்.

நான் சிரித்தேன்; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று சுவர் கேட்டது.

''உனக்கு நான் ஆதாரமாக இருக்கலாம்; எனக்கு நீ ஆதாரமாக இருக்கலாம். நம் இருவருக்கும் ஆதாரம் மனிதன் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது!'' என்றேன் நான்.

''தனக்கு ஆதாரம் கடவுள் என்பதை மனிதன் மறக்கும்போது நாம் ஏன் அவனை மறக்கக்கூடாது-'' என்று என்னைத் திருப்பிக் கேட்டது சுவர்.

## 4

ஒருவன் மேலே ஏறிச் சென்றதும் முதல் வேலையாக என்னைக் கீழே தள்ளிவிட்டான்.

அப்படியே சாய்ந்து கீழே விழுந்த நான், ''இப்படிக் கூடச் செய்யலாமா, இது நியாயமா?'' என்று கேட்டேன்.

''நியாயமாவது, அநியாயமாவது! அப்ப்டிச் செய்யாவிட்டால் மேலே வந்த பெருமையை நான்

அடைவதற்குப் பதிலாக நீயல்லவா அடைந்து தொலைப்பாய்!'' என்றான் அவன், கொஞ்சங்கூடக் கூசாமல்.

## 5

ஒரு நாள் இரவு; மாடி அறையில் இருந்த தன் காதலியை நேர் வழியில் சென்று சந்திக்க முடியாத காதலன் ஒருவன், அந்த வீட்டுப் புழக்கடைச் சுவரின் மேல் என்னை வைத்து ஏறிக் குறுக்கு வழியில் சென்று அவளைச் சந்தித்தான்.

''ஆச்சரியமாயிருக்கிறதே! அத்தனை பேர் கீழே இருக்க நீங்கள் எப்படி மேலே வந்தீர்கள்?'' என்று அவனை வியப்புடன் கேட்டாள் காதலி.

''உனக்காகப் பறந்து வந்தேன், கண்ணே!'' என்று அவன் ஒரு போடு போட்டான்.

அப்போது எதிர்பாராத விதமாக அங்கே வந்த அவன் காதலியின் அப்பா, ''இப்படி எத்தனை நாட்களாக இங்கே நீ பறந்து வருகிறாய்?'' என்று அவனைக் கேட்டார்.

அவ்வளவுதான்; அவன் சட்டென்று பாய்ந்து வந்த வழியே ஓடி, கீழே நான் சாத்தி வைக்கப்பட்டிருந்த இடத்தைப் பார்த்தான். என்ன ஏமாற்றம்! அவன் காதலியின் அப்பா என்னை அங்கிருந்து எடுத்து விட்டுத் தான் மேலே வந்திருக்கிறார் என்ற சங்கதி அப்போது தான் அவனுக்குத் தெரிந்தது; விழித்தான்!

''ஏன், வரும்போது பறந்து வந்தாயே, போகும் போது பறந்து போக முடியவில்லையா?'' என்றார் காதலியின் அப்பா.

இதைக் கேட்டதும் காதலி தன்னை மறந்து சிரித்தாள்; காதலனும் சிரித்தான். அவர்கள் இருவரும் சிரித்ததைப் பார்த்துக் காதலியின் அப்பாவும் சிரித்து விட்டார்!

பலன்?-கலியாணத்தில்தான் முடிந்தது என்றாலும் அவர்கள் மட்டும் என்னை நினைக்கவா செய்கி றார்கள்?-ஊஹூம்!

## 6

என்னை வைத்து மேலே வந்த ஒருவனைப் பார்த்து, ''நீங்கள் எப்படி மேலே வந்தீர்கள்?'' என்று ஒரு பத்திரிகை நிருபர் கேட்டார்.

''உழைப்பு, உழைப்பு, கடும் உழைப்பு!'' என்று அளந்தான் அவன்.

நான் சிரித்தேன்; ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டது என்னைத் தாங்கி நின்ற சுவர்.

''நாம் இருவரும் இங்கே இருப்பது மேலே போனவனுக்குத்தான் தெரியவில்லையென்றால் அந்தப் பத்திரிகை நிருபருக்கும் தெரியவில்லையே, அதை நினைத்துத்தான் சிரிக்கிறேன்!'' என்றேன் நான்.

## 7

இரவு நேரம்; என்னைத் தூக்கிக்கொண்டு ஒருவன் முன்னால் செல்ல, இன்னொருவன் தலையில் நூற்றுக் கணக்கான வண்ணப் போஸ்டர்களுடனும், ஒரு வாளி கூழுடனும் அவனுக்குப் பின்னால் சென்று கொண்டிருந்தான். இருவரும் போஸ்டர் ஒட்டுவதற்

கேற்ற சுவர் கண்ட இடங்களிலெல்லாம் நின்று, அங்கங்கே ஒரு போஸ்டரை ஒட்டிவிட்டு மேலே மேலே சென்று கொண்டிருந்தார்கள்.

பொழுது விடியும் நேரம்; ''இன்னும் எவ்வளவு போஸ்டர் பாக்கியிருக்கும்?'' என்று முன்னால் சென்றவன் திரும்பி, பின்னால் வந்தவனைக் கேட்டான்.

''நூறு போஸ்டருக்குக் குறையாமல் இருக்கும்'' என்றான் அவன்.

''அடேயப்பா! இன்னும் அத்தனை போஸ்டரா இருக்கிறது?... ஆவ்!'' என்று கொட்டாவி விட்டுக் கொண்டே, ''வா, செட்டியார் கடைக்குப் போவோம்'' என்றான் அவன்.

இருவரும் செட்டியார் கடைக்குப் போய்க் கதவைக் தட்டினார்கள். அவர் ஒரு பழைய பேப்பர் வியாபாரி. அவரும் ''ஆவ்!'' என்று கொட்டாவி விட்டுக்கொண்டே எழுந்து வந்து, ''நீங்களா! ஏதாவது போஸ்டர் கொண்டு வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஆமாம்'' என்றான் முன்னவன்.

''சரி, கொடு!''

பின்னவன் கொடுத்தான்.

அதை வாங்கித் தராசில் வைத்து நிறுத்துப் பார்த்து விட்டு, இரண்டு ரூபாயை எடுத்து முன்னவனிடம் கொடுத்தார் செட்டியார். அதை வாங்கிக்கொண்டு, ''ஜாக்கிரதை! விஷயம் வெளியே தெரிந்தால் உங்களுக்கும் நல்லதல்ல, எங்களுக்கும் நல்லதல்ல!'' என்று செட்டியாரை எச்சரித்துவிட்டு, இருவரும் ஒரு சாயாக் கடைக்குச் சென்றார்கள். பரோட்டா, சால்னா, டீ எல்லாம் சாப்பிட்டுவிட்டுத் தங்கள் குடிசைக்கு வந்தார்கள்.

''அந்த நூறு வண்ணப் போஸ்டர்களை அச்சிட்டவனுக்கு இருநூறு ரூபாயாவது செலவாகியிருக்குமல்லவா?'' என்றான் முன்னவன், தன் படுக்கையை எடுத்து விரித்துக்கொண்டே.

''அந்தக் கணக்கைச் செட்டியாரே பார்க்காதபோது நாம் ஏண்டா, பார்க்கணும்?'' என்றான் முன்னவன்.

''அதில் அவருக்கு லாபம், அதனால் பார்க்கவில்லை!''

''நமக்கு மட்டும் நஷ்டமா? வேலைக்கு வேலையும் மிச்சமாச்சு, ரெண்டு ரூபாய் நாஸ்தாவுக்கும் ஆச்சே! அது லாபமில்லையா?''

''இப்படியே அவனவன் லாபத்தை அவனவன் பார்த்துக் கொண்டே போனால்...'' என்று பின்னவன் இழுத்தான்.

''அதுதான் உலகம்! பிறத்தியான் நஷ்டத்தைப் பற்றிக் கவலைப்படறவனுக்கு இந்தக் காலத்திலே 'பிழைக்கத் தெரியாதவன்'னு பேருடா முட்டாள், நீ தூங்கு!'' என்றான் முன்னவன்.



## விந்தன் குட்டிக் கதைகள்

மனிதனை மனிதன் நேசிக்க வேண்டும். இதனால் சமூகம் மேன்மையுறும் என்று சொல்லியுள்ள அற நூல்கள் அனந்தம்.

ஆனால் யதார்த்த வாழ்வின் நிகழ்வுகள் தாறுமாறாக நடந்துவிடுகின்றன. அது அறியாமையாலும் அலட்சியத்தால் மிகுதியா கவும் அறங்கேறி விடுகின்றன.

அமரர் விந்தன் சமூகத்தின் மனசாட்சியாக இந்தக் குட்டிக் கதைகளில் இது போன்ற நிகழ்வுகளை எள்ளி நகையாடுகிறார். அங்கதத் தொனியில் அம்பலப்படுத்துகிறார்.

படிக்க சுவையான கதைகள். நிறையவே யோசிக்க வைக்கும் சிறப்பு விந்தன் குட்டிக் கதைகளுக்கு உண்டு.



000015